என்னுயிர்
வாழ்க்கைத் துணையே,
உன்னைத் தவிர
வேறு ஒரு பெண்ணைத்
தொடமாட்டேன்.
இது சத்தியம்



**இல்லறமே நல்லறமாய் வாழ்வோர்க்கு**
**என்றும் இல்லை எய்ட்ஸ் பயம்.**




**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு**

417, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை - 600 008.

போன் : (044) 8255261 / 8255467 / 8254917 (சென்னை)

24 மணி நேரமும் இயங்கும் ஹாட்லைன்

(044) 8256882 / 8256864 (சென்னை)

GALAXY / AS / 1015

சேலத்தில் நடப்பது, தி.மு.க.வின் ஒன்பதாவது மாநில மாநாடு. இதற்கு முன் நடந்த மாநாடுகளுள், கட்சிக்குத் திருப்புமுனையாக அமைந்த சிலவற்றைப் பற்றி விவரிக்கிறார் பேராசிரியர் க. அன்பழகன்.



# தி(ருப்புமுனை)மு.க. மாநாடுகள்!

**1956**-ல் திருச்சியில் இரண்டாவது மாநில மாநாடு நடைபெற்றது. கழக வரலாற்றிலே அந்த மாநாடு மிக முக்கியத்துவம் வாய்ந்தது. தி.மு.க. சட்டமன்றத் தேர்தலில் ஈடுபடலாமா? கூடாதா? என்ற கேள்விக்கு விடைகாணப்பட்ட மாநாடு.

மாநாட்டு வளாகத்தில், வோட்டுப் பெட்டி வைக்கப்பட்டது. கழகப் பிரதிநிதிகள் அனைவரும், ஜனநாயக முறைப்படி தங்கள் எண்ணங்களை, வாக்குகள் மூலமாக வெளிப்படுத்தினார்கள்!

தி.மு. கழகம், தேர்தலில் ஈடுபடலாம் என்று மூன்றில் இரண்டு பங்குக்கும் அதிகமானவர்கள் விரும்பியதற்கேற்ப, 57 தேர்தலில், தமிழக சட்டமன்றத்துக்கு, தி.மு.கழகம் போட்டியிட்டது!

**சேலம் மாநாடு — த.மா.காவுடன் உறவு — திருப்பத்தூர் எம்.எல்.ஏ. விவகாரம் — திடீர் பஸ் ஸ்டிரைக் — ஆட்சியில் சவால்கள் — அசத்தும் சாதனைகள் — உடல் நலம் — ஓய்வு...**

**மனம் விட்டுப் பேசுகிறார் கலைஞர்.** **பார்க்க — பக்கம் 20**

# அதென்ன சிறப்பு மாநாடு?

● 1949ல் அண்ணா கழகத்தைத் துவக்கியபோது வகுத்த சட்ட விதிகளின்படி, ஐந்து வருடத்துக்கு ஒரு முறை மாநில மாநாடுகள் நடத்தப்பட வேண்டும். ஒவ்வொரு மாநில மாநாட்டிற்கும் முன்னர் எல்லா மாவட்டங்களிலும் மாவட்ட மாநாடுகளை நடத்தி முடித்திருக்க வேண்டும்.



• அண்ணாவே நடிப்பார்!

1952ல் சென்னை எஸ்.ஐ.ஏ.ஏ. திடலில் முதல் மாநாடு நடந்தது. அப்போது எம்.ஜி.ஆரை விட செல்வாக்குப் பெற்றிருந்தவர் கே.ஆர்.ராமசாமி. (இவரது காரைத்தான் அண்ணாவே பயன்படுத்தி வந்தார்!) முதல்நாள் சுயமரியாதை மற்றும் பகுத்தறிவுக் கொள்கைகளைச் சொல்வதற்காக சமூக சீர்திருத்த மாநாடாகவும் மறுநாள் அரசியல் மாநாடாகவும் நிகழ்ச்சிகள் நடந்தன. திராவிட இயக்கப் புத்தகக் கண்காட்சி மற்றும் ஓவியக் கண்காட்சி ஆகியவையும் நடத்தப்பட்டன.

● இப்போது சேலத்தில் நடக்க இருப்பது சிறப்பு மாநாடு. மாநில மாநாட்டிற்கும் சிறப்பு மாநாட்டிற்கும் வித்தியாசம் உண்டு. சிறப்பு மாநாடு என்பது ஏதாவது ஒரு பிரச்னையின் அடிப்படையிலும் மற்றும், தொண்டர்களை உற்சாகமாக வைத்துக் கொள்வதற்காகவும், கட்சி 'fire brand'ஆக இருக்கிறது என்பதைக் காட்டுவதற்காகவும் நடத்தப்படுவது.

● அண்ணா இருந்தவரை மாநாட்டில் போடப்படும் நாடகங்களில் அவரே நடிப்பார். அதை ரசிக்க பெரிய கூட்டம் காத்திருக்கும். பிரமுகர்கள் பல்வேறு தலைப்புகளில் பேசும் உரைகளை தொண்டர்கள் உன்னிப்பாகக் கேட்பார்கள். 1952,1957 இரண்டு மாநில மாநாடுகளிலும், தனித் தமிழ் நாட்டை வலியுறுத்தி தீர்மானம் போடப்பட்டது. 1962லிருந்து அது போன்ற தீர்மானம் கிடையாது. காரணம் தனிநாடு கொள்கை, சீன ஆக்ரமிப்பின்போது கைவிடப்பட்டது. இலங்கைப் பிரச்னை, இந்தி திணிப்பு பற்றி எல்லா மாநாடுகளிலும் தீர்மானம் உண்டு.

- ஸ்ரீநிவாசன்

அடுத்தபடியாக 1966 – 67ல் சென்னை விருகம்பாக்கத்தில் நடந்த மாநாட்டையும் திருப்புமுனை ஏற்படுத்திய ஒன்றாய்க் குறிப்பிடலாம்.

பல்வேறு அரசியல் கட்சிகளும், ஒரே நோக்கத்துக்காக, (காங்கிரஸை வீழ்த்தி, மாற்று ஆட்சி அமைப்பது) ஒன்றாகச் சேர்ந்து தேர்தலில் ஈடுபட முடியும் என்று எடுத்துக்காட்டிய மாநாடு அது!

அறிஞர் அண்ணா, மூதறிஞர் ராஜாஜி, காயிதே மில்லத், ம.பொ.சி. மற்றும் பொதுவுடமைக் கட்சித் தலைவர்கள் அனைவரும் அந்த மாநாட்டில் பங்கேற்று உரையாற்றினார்கள்.

இந்த மாநாடு, தி.மு.க. வரலாற்றில் மட்டுமின்றி, தமிழ்நாட்டின் அரசியல் வரலாற்றிலேயே ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியது என்று குறிப்பிடலாம்!

திருப்புமுனை என்று குறிப்பிட முடியாது என்றாலும், மிக முக்கியமான ஒன்று என்று 75 டிசம்பரில் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் நடத்தப்பட்ட தி.மு.கவின் மாவட்ட அளவிலான மாநாடுகளைக் குறிப்பிடலாம்.

இந்திரா காந்தி அம்மையார் நாட்டில் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்தபோது, நாட்டில் ஜனநாயகம் நிலைபெற்றிட, நெருக்கடி நிலைமை கைவிடப்பட வேண்டும் என்று வலியுறுத்தி பல்வேறு மாவட்டங்களிலும் தி.மு.க. மாநாடு நடத்தியது. கோவை மாவட்ட மாநாட்டில், பேசப்பட்ட பிரதான விஷயமே, எமர்ஜென்ஸி எதிர்ப்புதான்!

விளைவு?

76 ஜனவரி 30-ம் தேதி, தி.மு.க. ஆட்சி கலைக்கப்பட்டது!

96-ல் திருச்சியில் நடைபெற்ற மாநாடும் ஒருவகையில் சிறப்பு வாய்ந்தது. தி.மு.க.வுக்கு மக்கள் ஆதரவில் சரிவு ஏற்பட்டு உள்ளது என்று நடைபெற்ற பிரசாரத்தை முறியடித்து, கழகம் மக்கள் ஆதரவு பெற்ற ஒரு வலுவான இயக்கம் என்று நிரூபித்தது! 96 பொதுத் தேர்தலில் தி.மு.க. வெல்ல வழிவகுத்தது!

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி

வண்ணப்படம் : பிரவீன்குமார்



# கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை

# ஏழை மாணவர்களுக்கு உதவி: ரூ. 80,000/-

சென்ற ஆண்டு அறிவிக்கப்பட்டதைவிட, இந்தக் கல்வி ஆண்டுக்கு (97-98) ரூ.10,000/- அதிகரித்து, மொத்தம் ரூ.80,000/- உதவித் தொகை வழங்கப்படவிருக்கிறது. இது பின்வருமாறு விநியோகமாகும்:

●● ஒருவருக்கு ரூ. 1500 வீதம் ஆறு பட்ட மேற்படிப்பு அல்லது ஆராய்ச்சி மாணவருக்கு: ரூ. 9000

●● ஒருவருக்கு ரூ.1500 வீதம் இசை அல்லது நாட்டியம் பயிலும் இரு மாணவருக்கு: ரூ.3000.

●● ஒருவருக்கு ரூ. 1000 வீதம் 26 கல்லூரி மாணவருக்கு: ரூ.26,000

●● ஒருவருக்கு ரூ.750 வீதம் 40 மேல்நிலைப் பள்ளி அல்லது பாலிடெக்னிக் மாணவருக்கு : ரூ. 30,000.

●● ஒருவருக்கு ரூ.600 வீதம் 20 உயர்நிலைப் பள்ளி மாணவருக்கு: ரூ.12,000.

இவற்றுள் அமரர் கல்கி படித்த மூன்று பள்ளிக்கூடங்களில் மூன்று மாணவர்களுக்கு மூன்று உதவித் தொகைகள் ஒதுக்கப்படுகின்றன. மீதமுள்ள உதவித் தொகைகளைப் பெற மாணவர்கள் விண்ணப்பிக்கலாம்.

✡ விண்ணப்பங்களை மாணவர்கள் தங்கள் கைப்பட எழுத வேண்டும்.

✡ தபால் மூலம் மட்டுமே அனுப்பலாம்.

✡ அரசு அங்கீகாரம் பெற்ற ஒரு கல்வி நிலையத்தில் சேர்ந்து படிக்க அனுமதி பெற்றிருக்க வேண்டும்.

✡ படிப்பில் சிறந்தவர்களாக விளங்கி, பெற்றோர் உதவியுடன் மட்டுமே கல்வியைப் பின்தொடர முடியாத நிலையில் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாக இருக்க வேண்டும்.

✡ மேற்கூறியவற்றை உறுதிப்படுத்த கல்வி நிலையத்தின் முதல்வருடைய சான்றிதழை இணைக்கவும்.

✡ சென்ற கல்வி ஆண்டின் இறுதித் தேர்வில் பெற்ற மதிப்பெண் நகலை முதல்வருடைய கையொப்பத்துடன் அனுப்பவும்.

நிபந்தனைகளைப் பூர்த்தி செய்யாத விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படும்.

உதவித் தொகை பெறத் தகுதியுடைய மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதில் அறங்காவலர்களின் முடிவே இறுதியானது.

தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு விவரம் தெரிவிக்கப்படும். மற்றபடி கடிதப் போக்குவரத்து கிடையாது. சான்றிதழ்களைத் திருப்பி அனுப்புவதற்கில்லை.

விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசி தேதி:
ஜூலை 31, 1997.

*விண்ணப்பங்கள் அனுப்ப வேண்டிய முகவரி:*

**நிர்வாக அறங்காவலர்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை,**
**நெ.1, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம்,**
**நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.**

● 'ஆண்டவனே சிகிச்சைக்கு வந்தாலும், தஞ்சை மருத்துவமனையில் காசு தராமல் சிகிச் சையளிக்க மாட்டார்கள்!' என்று நாங்கள் சொல்லவில்லை. அமைச்சர் கோ. சி. மணி அவர்களே சொல்லியிருக்கிறார். 'முதலமைச் சரைப் போல மற்ற அமைச்சர்களும் பந்தயக் குதிரை வேகத்தில் செயல்பட வேண்டும்!' என்று இதையும் நாங்கள் சொல்லவில்லை. தி.மு.கவைச் சேர்ந்த மத்திய அமைச்சர் மாறன் அவர்கள்தான் சொல்லியிருக்கிறார்.

● எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் சரி, இந்தக் கள்ளச் சாராய வியாபாரிகள் என்ன செய்கிறார்கள்? ஆட்சியிலிருக்கும் கட்சிக்காரர் களைப் போல வேஷம் போட்டுக் கொண்டு விடுகிறார்கள். இப்போதும் அப்படித்தான் நடக்கிறது. சொல்லப் போனால் இதுபோன்ற சமூக விரோதிகள் ஓர் இணையான அரசாங் கத்தையே நடத்திக் கொண்டிருக்கிறார்கள். இவர்களின் ஆதிக்கம் என்கிற முதுகெலும்பை இன்றைய ஆட்சி அடித்து நொறுக்க வேண்டும். இப்படிச் செய்தால் அதுதான் தமிழ்ச் சமுதாயத்துக்குத் தி.மு.க. செய்கிற மிகப் பெரிய தொண்டாக இருக்க முடியும்.

● ஜெயலலிதா அரசு தூக்கியெறியப்பட்டு விட்டாலும் அவர் காலத்திய 'செயல் முறை' களுக்குப் பழகிப் போன அதே அரசு அமைப் புதான் இன்னமும் நீடிக்கிறது. சுருக்கமாகச் சொல்வதென்றால் அதிகார அமைப்பு என்பது தி.மு.க. அரசின் கால்களில் மாட்டிய விலங் காகத்தான் இருக்கிறது. இதிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டால்தான் தி.மு.க. அரசால் நன்றாகச் செயல்பட முடியும்.

● உள்ளாட்சித் தேர்தல்களை நடத்தி முடித் ததற்காகத் தி.மு.க. அரசைப் பாராட்டுகிறோம். அதே சமயத்தில் உள்ளாட்சி அமைப்புகளில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், தேர்ந்தெடுக்கப் பட்ட ஜனநாயகப் பொம்மைகளாகத்தான் இருக்கிறார்கள். எனவே, அதிகாரப் பரவலுக்கு மாநில அரசு உடனடியாக வழிவகை செய்ய வேண்டும்.

● 67 வரை நிர்வாகச் செலவு என்பது 15 சதவிகிதம்தான் இருந்தது. மீதியுள்ள 85 சதம் வளர்ச்சித் திட்டங்களுக்குப் பயன்பட்டது. இப் போதோ நிர்வாகச் செலவு 85 சதமாகி விட்ட தால் வளர்ச்சித் திட்டங்களுக்கான தொகை 15 சதமாகக் குறைந்துவிட்டது. இது அனைத் திந்திய அளவுக்கும் பொதுவானதுதான் என் றாலும் ஒரு முன்னோடியாக நிர்வாகச் செலவு களைக் குறைக்கிற வழிமுறைகளைத் தி.மு.க. அரசு கண்டறிந்து கடைப்பிடிக்க வேண்டும்.

● போக்குவரத்தை எடுத்துக் கொண்டால் என்ன நடக்கிறது? நெல்லையில் ஒரு பிரச்னை என்றால் தமிழகம் முழுவதுமே போக்குவரத்துத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து, இயல்பு வாழ்க்கையை ஸ்தம்பிக்கச் செய்கிறார் கள். இந்த வெள்ளைத் திமிங்கலத்தை அடக்க வேண்டாமா? அதற்காகப் புதிய முதலாளி களை உருவாக்க வேண்டும் என்பதில்லை. வேலையற்ற பட்டதாரிகளுக்குக் கடனுதவி தந்து ஊக்குவித்து மினி பஸ்களை இயக்கச் செய்யலாம். இதனால் வேலையில்லாத் திண் டாட்டமும் குறையும். ஒரு பிரச்னை என்றால் இயல்பு வாழ்க்கை முற்றிலுமாகப் பாதிக்கப் படுவதைத் தவிர்க்கலாம்.

● ஆசிரியர் பணி நியமனத்தில் தி.மு.க. அரசு மிகவும் நேர்மையான முறையில் நடந்து

# மேகங்கள் கருக்க ஆரம்பித்ததே தவிர, மழை பொழியவில்லை!

**— தி.மு.க. ஆட்சி பற்றி பீட்டர் அல்போன்ஸ்!**

கொண்டதைப் பாராட்டுகிறோம். அதே போல நியமிக்கப்படவிருக்கும் மக்கள் நலப் பணியாளர்கள் விஷயங்களிலும் செயல்பட வேண்டும். உதாரணத்திற்கு ஒரு மாவட்டத்தில் ஆயிரம் பணியாளர்களை நியமிக்க வேண்டும்



என்கிற நிலையில் என்ன செய்யலாம்? அந்த மாவட்டத்திலிருக்கும் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்துள்ள, இன்னமும் வேலை கிடைக்காத, முன்னுரிமையிலுள்ள முதல் ஆயிரம் பேரை அப்படியே எடுத்து நியமிக்கலாம். அப்போது யாரும் அதில் எந்த விதமான குற்றச்சாட்டும் சுமத்த முடியாமல் போகும்!

● தி.மு.க. அமைச்சரவையில் உள்ள ஏழெட்டு அமைச்சர்களைத் தவிர, மற்றவர்களெல்லாம் அவர்களின் பிரதிநிதி, இவர்களின் பிரதிநிதி என்கிற ரீதியிலேயே நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். திறமைகளின் அடிப்படையில் நியமிக்கப்படவில்லை. இதன் காரணமாகத் தான் நிர்வாகத்தில் சுறுசுறுப்பில்லை என்று மாறன் அவர்களைப் போலவே நாங்களும் கருதுகிறோம். எனவே, இது போன்ற அரசியல், சமூக நிர்ப்பந்தங்களைத் தகர்த்தெறிந்து விட்டுச் செயல்படுகிற துணிவு தி.மு.க. தலைமைக்கு வர வேண்டும். அப்போது தான் எதிர்காலச் சமுதாயம் செழிப்பாக இருக்க முடியும்.

● அ.தி.மு.க. ஆட்சிக்குப் பிறகு, குறுகிய காலத்தில் சம்பாதிக்கிற எண்ணம் தி.மு.க.விலுள்ள சிலரிடம் பரவலாக வந்து கொண்டிருப்பதாக உணர்கிறோம். இதைக் கலைஞர் உடனடியாகக் கட்டுப்படுத்த வேண்டும்; அந்த எண்ணத்தையே வேரோடு கெல்லி எறிய வேண்டும்.

● கலைஞரின் எண்ணம் தூய்மையானதாகத் தான் இருக்கிறது. இதோடு அது புதுமையானதாகவும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறோம். கூடவே, இந்த எண்ணங்களை எந்தவிதமான அரசியல், சமூக நிர்ப்பந்தங்களுக்கும் ஆட்படாமல் செயல்படுத்துகிற துணிவோடும் அவர் செயல்பட வேண்டும். இப்படிப்பட்ட செயல்பாடுகளுக்கு நாங்கள் பரிபூரண ஒத்துழைப்பைத் தருவதற்குத் தயாராக இருக்கிறோம். சுருக்கமாகச் சொல்வதென்றால் தி.மு.க. ஆட்சியில் மேகங்கள் கருக்க ஆரம்பித்ததே தவிர, மழை பொழியவில்லை. அந்த மழை நாளுக்காகத்தான் ஆவலோடு காத்திருக்கிறோம்!

*(பீட்டர் அல்போன்ஸுக்கு அமைச்சர் ஆலடி அருணாவின் பதில் அடுத்த பக்கங்களில்...)*

● "அமைச்சர்களின் செயல்பாட்டைப் பற்றி மத்திய அமைச்சர் மாறன் அவர்கள் ஒரு நல்ல எண்ணத்தோடுதான் சொன்னார். அமைச்சர்கள் மேலும் அதிகமான வேகத்துடன் செயலாற்ற வேண்டும் என்ற நல்ல நோக்கம்தான் அவரது பேச்சில் தெரிகிறது. நான்கு மணி நேரம் தாமத மாக வரும் ரயில் வண்டியை ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து தொடரும் பொறுப்பை ஏற்கும் ஓட்டுனர் அந்தத் தாமதமான நேரத்தையும் மேக் கப் செய்து, சரியான நேரத்துக்கு ரயிலை, சேரும் இடத்துக்குக் கொண்டு சேர்க்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது போன்ற பேச்சுதான். மொத்தத் தில் அவரது நோக்கத்தை பாஸிட்டிவ்வாக எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர உள்நோக் கம் கற்பிப்பது சரியல்ல. அது போலவே கோ. சி. மணி அவர்கள் தெரிவித்த கருத்தும். லஞ்சம் என்பது இன்று நேற்று தோன்றியதல்ல; அதுவும் தாசில்தார் ஆபீஸ், ஆஸ்பத்திரி போன்ற இடங் களில், கீழ்மட்டத்தில் லஞ்சம் இருக்கவே செய்யும். அரசின் கவனத்துக்கு வரும் இடங் களில் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொண்டு தான் இருக்கிறோம். கீழ்மட்டத்து ஊழல். லஞ்சம் என்பது நிர்வாக அமைப்பு முறையுடன் ஊறிப் போனது. கடந்த அரசாங்கத்தில் முறை கேடுகள், ஊழல்கள் நடைபெறுவதைச் சுட்டிக் காட்டியபோது, 'நடக்கவேயில்லை' என்று வாதிட்டதோடு அல்லாமல், நடந்த தவறுகளை யும் நியாயப்படுத்தினார்கள். ஆனால் கலைஞர்

## அல்போன்ஸுக்கு

## ஆலடி அருணா பதில்!

அரசு அப்படியல்ல. தவறு செய்தவர்கள் மீது தாட்சண்யம் பார்க்காது. நடவடிக்கையும் எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

● கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களுக்கும், சமூக விரோதிகளுக்கும், குண்டர்களுக்கும் கொஞ்சம் கூடக் கலைஞர் அரசு இரக்கம் காட்டாது; இடம் கொடுக்காது. ஆசைத்தம்பி, கபிலன் போன்றோர் தாதாக்கள் மட்டுமல்ல; கள்ளச்சாராய வியா பாரத்தின் மொத்த வியாபாரிகள். அவர்களைச் கட்டு வீழ்த்தப்பட்டது கழக ஆட்சியில்தானே! மற்றபடி கீழ்மட்டத்தில் சில கள்ளச்சாராய வியா பாரிகள், ஆளும் அரசியல் கட்சிப் பிரமுகர்களி டம் கூட்டுறவு வைத்துக் கொண்டு செயல்பட லாம். ஆனால் கலைஞர் கவனத்துக்கு இது போன்ற விஷயங்கள் வந்தால், கொஞ்சம்கூட கருணை காட்டாமல் நடவடிக்கை எடுத்து விடு வார்.

● முதல்வர் மற்றும் அமைச்சர்கள் மட்டத்தில் ஊழல் இல்லாவிடினும், அதிகாரிகள் மட்டத்தில் ஊழல் நிலவுகிறது என்று ஒரு பேச்சு! எப்படிப் பட்ட நிர்வாகத்தை சென்ற ஆட்சிக்குப் பிறகு நாங்கள் பெற்றிருக்கிறோம் என்பது நாட்டுக்குத் தெரிந்த ஒன்று. எந்த அதிகாரியையும் திடீரென்று வீட்டுக்கு அனுப்பிவிட முடியாது. அவர்கள் மூலம்தான் நாங்கள் காரியங்கள் செய்தாக வேண்டும். நாங்கள் எப்போதுமே அதிகாரிகளை சட்டப்படித்தான் நடக்கச் சொல்லுகிறோம். எங்கள் சுயநலத்துக்கு அவர்களைப் பயன் படுத்துவதில்லை. ஏதோ ஒரு நியாய விலைக் கடையில் மூன்று பேர் கொண்ட குடும்பத்துக்கு இருபது கிலோ அரிசி போட வேண்டும் என்ற அரசின் உத்தரவை அமுல்படுத்தவில்லை என்ற காரணத்திற்காக, தமிழ்நாட்டிலுள்ள 20,000 ரேஷன் கடைகளிலும் அந்த உத்தரவு அமுல் படுத்தப்படவில்லை என்று சொல்ல முடியுமா? எங்கோ ஒருசில அதிகாரிகள் பல்வேறு காரணங்



களுக்காக அரசின் உத்தரவுகளை அமுலபடுத்து வதில் சுணக்கம் காட்டலாம். ஆனால் பொது வாக எங்களுக்கு அதிகாரிகளிடத்தில் நல்ல ஒத்துழைப்பு கிடைக்கிறது.

● தேர்ந்தெடுக்கப்பட்ட உள்ளாட்சி அமைப்பு களுக்கு அதிகாரம் கொடுக்கப்படாததும் விமர் சிக்கப்படுகிறது. நம் தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் உள்ளாட்சிகளில் இரண்டடுக்கு முறைதான். 1960களுக்கு முன்னர் ஜில்லா போர்டு என்ற அமைப்புகள் மூன்றடுக்காக

இருந்ததை இரண்டடுக்காக மாற்றியவர் காமராஜ் அவர்கள்தான். மீண்டும் ராஜீவ் காந்தி அவர்கள் காலத்தில் புதிய பஞ்சாயத்துச் சட்டப்படி மூன்றடுக்கு முறை மறுபடியும் கொண்டு வரப் பட்டிருக்கிறது. மாவட்டப் பஞ்சாயத்துத் தலைவர் மற்றும் உறுப்பினர்களுக்கு நலப்பணிகளைக் கண்காணிக்கும் பொறுப்பும் திட்டங்கள் தீட்டும் அதிகாரமும் இருக்கிறது. இது தவிர இன்னமும் அதிகாரங்களைப் பரவலாக்குவது குறித்து ஆராய்வதற்கு கமிட்டி போடப்பட்டுள்ளது.

● வளர்ந்து வரும் நாடுகளில் மக்களுக்கு எல்லாம் கிடைக்க வேண்டுமென்பதற்காக அரிசி கொடுப்பது முதல் பஸ் ஓட்டுவது வரை பல வேலைகளையும் அரசு செய்தாக வேண்டியிருக்கிறது. அப்போதுதான், பொதுமக்கள் தனியார்களின் சுரண்டலிலிருந்து பாதுகாக்கப்படுவார்கள் என்பதால் இதுபோன்ற நிர்வாகச் செலவுகள் தவிர்க்க முடியாதவை. போகப் போகச் சரியாகி விடும்.

● வேலையில்லாப் பட்ட தாரிகளுக்கு மினி

வாங்கியிருக்க முடியாது. எல்லோரும் சமமான புத்திசாலிகள் அல்ல. ஆனால் அதே சமயம், அவர்கள் திறமையற்றவர்களும் அல்ல! எம்.எல்.ஏ. பொறுப்புக்குக் கட்சியில் ஸீட் கொடுக்கும்போதே கலைஞர் அவர்கள், திறமையானவர்களையே தேர்ந்தெடுக்கிறார். அதனால் திறமைக் குறைவு என்ற பேச்சுக்கே இடமில்லை.

● இப்படிப் பார்த்தால், முதலில் ஆண்ட காங்கிரஸ்காரர்களைப் பார்த்துத்தான் சம்பாதிக்கும் ஆசை மற்றவர்களுக்கும் வந்தது என்று நான் சொல்ல வேண்டியிருக்கும். தி.மு.க. தொண்டன் என்பவன் ஒரு கொள்கைப் பிடிப்புடன் இருக்கக் கூடியவன். மற்ற கட்சியினரைப் போன்று ஆட்சியைப் பிடிப்பதே லட்சியம், கொள்கை என்று தொண்டர்களுக்கு நாங்கள் ஆசை காட்டுவதில்லை. கட்சிக்காரர்கள் எல்லோருமே கட்டுப்பாட்டுக்குள்தான் இருக்கிறார்கள்.

● மேகம் கருத்

# "நாளும் பொழிகிறது நல்லாட்சி மழை!"

பஸ்கள் ஓட்டுகிற உரிமங்களை வழங்குவதில் தவறில்லை. ஆனால் அவர்களும் ஒரு கால கட்டத்தில் ஒரு பிரச்னை என்றால் அரசுக்கு எதிராகத்தான் இருப்பார்கள். டிக்கெட் கட்டணத்தை உயர்த்த வேண்டும் என்று போராடத்தான் செய்வார்கள்.

● மக்கள் நலப் பணியாளர்களுக்கு சம்பளம் வெறும் ஐந்நூறு ரூபாய்தான். ஆகவே சம்பளத்துக்காக யாரும் அந்தப் பணியை மேற்கொள்ள முடியாது. எனவே சமூக நலத்தில் அக்கறை உள்ளவர்களை மட்டும்தான் அந்தப் பணிகளில் நியமனம் செய்ய முடியும். இதில் கட்சிக் கண்ணோட்டம் பார்க்க மாட்டார்கள்.

● கலைஞர் தலைமையின் கீழ் இயங்கும் அமைச்சர்கள் நாணயமானவர்கள், திறமையானவர்கள், தலைமைக்குக் கட்டுப்பட்டவர்கள். ஒரு பள்ளியில் நூறு சதவீதம் தேர்ச்சி பெற்றார்கள் என்றால், எல்லோருமே நூற்றுக்கு நூறு மார்க்

திருக்கு; ஆனால் மழை பொழியவில்லை என்று சொல்கிறார் அல்போன்ஸ். தேர்தலை ஒட்டி 20 கிலோ அரிசி போடுகிறோம் என்று ஜெயலலிதா சொல்லிவிட்டுப் போய் விட்டார். அதை அமுல்படுத்தியது கலைஞர் அரசுதான்.

சென்னையை 'டெட்ராய்ட்' ஆக்கும் அளவுக்கு இரண்டு கார் தயாரிப்புத் தொழிற்சாலைகளைக் கலைஞர் கொண்டு வந்திருக்கிறார்.

கோட்டைக்கு இப்போது வருபவர்கள் யாரும் பெட்டிகளோடு வருவது கிடையாது; பெட்டிஷன்களோடுதான் வருகிறார்கள். சென்ற ஆண்டு அடித்த வெள்ளச் சேதத்தின்போது செய்யப்பட்ட பணிகளில் ஊழல் எதுவும் கிடையாது... ஊழல் பெருமளவுக்குக் களையப்பட்டுள்ளது. மக்களுக்கும் அரசுக்கும் நேரடித் தொடர்பு இருக்கிறது.

இப்படி நாளும் நல்லாட்சி மழை பெய்து கொண்டுதான் இருக்கிறது. நண்பர் பீட்டர் அல்போன்ஸ் வேறெங்கோ இருந்து கொண்டு பார்ப்பதால்தான் தமிழகத்தில் பெய்யும் இந்த மழை அவருக்குத் தெரியவில்லையோ என்னவோ!

# என்ன செய்யறாங்க?



• பிரகாஷ் ராஜ்

**சினிமா உலகம் ஸ்டிரைக்கில் இருக்கிறது. ஸ்டூடியோக்களில் நல்ல காற்று மற்றும் ஈயோட்டம். ஸ்டிரைக்குக்கான காரணம், தீர்க்க வழி பற்றியெல்லாம் பெரியவர்கள் பேசிக் கொண்டிருக்கட்டும். நடிக—நடிகையர் இந்த திடீர் ஓய்வை எப்படிக் கழிக்கிறார்கள் என்று பார்த்து வர ஒரு ரவுண்ட் புறப்பட்டோம்.**

• ரோஜா

**ஊ**ர்வசி வீட்டுக் கதவைத் தட்டிய போது புத்தகமும் கையுமாக எழுந்து வந்தார்.

"என்ன ஊர்வசி, ஏதாவது அஞ்சல் வழிக் கல்வி கோர்ஸில் சேர்ந்து விட்டீர்களா?" என்றபோது, "சேச்சே! பரீட்சை எழுதத்தான் படிக்க வேண்டுமா என்ன? என் இயல்பே நிறையப் படிப்பதுதான்! ஆனால் நேரம் எங்கே கிடைக்கிறது? இப்படி ஸ்டிரைக் அது இது என்று ஏதாவது வந்தால்தான்.." என்றவர் கையில் விவேகானந்தரின் ராஜ யோகம்!

"அம்மாடியோவ்... இப்படி ரொம்ப கன மான சமாசாரமெல்லாம் படித்தால் உங்கள்

• ஊர்வசி

மென்மையான (ஹச்!) மூளை தாங்குமா ஊர்வசி?"

"எனக்கு இவைதான் பிடிக்கிறது. நான் என்ன செய்யட்டும்? ராமகிருஷ்ணர், விவேகானந்தர் புஸ்தகங்கள் தாம் என் பெஸ்ட் பிரெண்ட்ஸ்!"

**ஊ**ர்வசிக்கு டாட்டா சொல்லி விட்டு, பஸ் பிடித்து ரவளியைப் பார்க்கப் போனபோது வீடியோவில் வெங்கடேஷோ யாரோ மாட்லாடிக் கொண்டிருந்தார்கள்.

"வாங்க. என் ஓய்வுப் பொழுது எப்போதும் வீடியோவுடன்தான் கழியும். ஒண்ணு தெரியுமா? மாசத்துல பாதி நாள் தெலுங்கு, பாதி தமிழ்னு நான் சமமா பிரிச்சி கால்ஷீட் குடுத்துடறேன். அதனால இந்த ஸ்டிரைக் அப்படியொண்ணும் என்னை ரொம்ப சோம்பேறி ஆக்கிடாது!'' என்றவர் ஓர்





• ரம்பா



# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்

## இணைந்து வழங்கும்

# ரூ. 50,000 நகை பரிசு!

**சிரிக்க வையுங்கள்; ஓர் ஏழைக் குடும்பம் சிறக்க வையுங்கள்!**

'மாமியார்-மருமகள்' என்ற தலைப்பில் கீழுள்ள கூப்பனில் ஜோக் எழுதியனுப்புங்கள். பிரசுரத்திற்குத் தேர்வாகும் ஒவ்வொரு ஜோக்கும் 100 ரூபாய் சன்மானம் பெறும். இந்த வாரத்துடன் முடியும் இப்போட்டியில் யார் அதிக அளவில் வெற்றி பெறுகிறாரோ அவர் சுட்டிக் காட்டும் ஓர் ஏழைக் குடும்பத்துக்கு - அதாவது திருமணத்துக்குத் தயாராக உள்ள வசதியற்ற குடும்பத்துப் பெண்ணுக்கு ரூ.50,000 மதிப்புள்ள தங்க நகைகள் பரிசு! வெற்றி பெறும் வாசகரே வசதியற்றவராக இருந்து அவரது மகளோ சகோதரிகளோ திருமண வயதில் இருந்தால் அவரே இப்பரிசைப் பெறலாம். கடைசி தேதி : 7.7.97

**மாமியார்-மருமகள் ஜோக் – போட்டி 12**

பெயர்:.......................................................

முகவரி:.......................................................

.......................................................

.......................................................

'உயர்ந்த' கருத்தையும் இலவச இணைப்பாக வெளியிட்டார்.

"திரையுலக ஸ்டிரைக் என்று அறிவித்து விட்டாலும் நிர்வாகிகள், மேல் மட்டத் தலைவர்கள் மட்டும் அதை அனுஷ்டித்துக் கொண்டு, ஷூட்டிங் நடக்கிறபடி நடக்க விடலாமே!"

அர்த்தம் அவ்வளவாகப் புரியாததால், உடனே நடையைக் கட்டி, விட்டோம் சவாரி.

நேரே ரோஜாவீடு. 'ஆவ்...' என்று கொட்டாவியுடன் எழுந்து வந்து கதவைத் திறந்தார் ரோஸ்.

"அடடே, தூங்கிட்டிருந்தீங்களா? எழுப்பிட்டதுக்கு ஸாரி" என்று சொன்னதும் "அது பரவாயில்லை. இது மாதிரி ஒட்டு மொத்தமா ரெஸ்ட் எங்க கிடைக்குது? தூங்கறதுங்கறதே கனவாப் போச்சு! சான்ஸ் கிடைச்சால் விடறதில்லை. ஷிப்ட் முறையில் ஒரு நாளைக்கு இருபது மணிநேர மாவது தூங்கிப் பார்த்துடணும்!"

"அய்யோ, குண்டாயிடுவீங்களே மேம்?"

"அதொண்ணும் பிரச்னை இல்லை. மறுபடி ராப்பகலா நடிச்சி காம்பன்ஸேட் பண்ணி இளைச்சுடுவேன்!"

சாஸ்திரத்துக்கு அடுத்தபடியாக ஒரு நடிகரைப் பார்க்கலாம் என்று பிரகாஷ் ராஜைப் பார்க்கப் போனபோது தன் குட்டிப் பெண் பூஜாவோடு கொஞ்சிக் கொண்டிருந்தார்.

"வாங்க பிரதர்! நம்ம பொழுதுபோக்கே என் குழந்தைதான்! பூஜாக்குட்டியோட விளையாடிட்டிருந்தா உலகமே மறந்துடும்!" என்று சுமார் அரைமணி பூஜாபுராணம் பாடிவிட்டு, விடுமுறையை வீணாக்காமல் மூணு நாள் அரவிந்தர் ஆசிரமம் போய் தங்கிவிட்டு வந்ததாகச் சொன்னார். (மன சாந்தி, நிம்மதி, புத்துணர்ச்சி எட்ஸெட்ரா.)

"அப்புறம் ஒரு முக்கியமான சேதி. பாரதிராஜாவோட 'குருபார்வை' படத்துல நடிக்கிறேன்- முதல் முறையா, முழு ஹீரோவா! அதுக்காக சில ஸ்பெஷல் மேனரிஸங்களை பிராக்டீஸ் பண்ணிப் பார்த்திட்டிருக்கேன்!" என்றார்.

"எங்கே ஒண்ணு எடுத்து விடுங்க பார்க்கலாம்!" என்று கேட்பதற்குள் பூஜாவுடன் அவர் ஜோராக விளையாட ஆரம்பித்து விட்டதால் ஜகாவாங்கி ரம்பா வீடு.

"ஸ்டிரைக்? ஓய்வு? பொழுதுபோக்கு? சான்ஸே இல்லை. மூணு பாஷைல நடிச்சிட்டிருக்கேன் இல்லியா? செம பிஸி. இதோ கிளம்பிட்டே இருக்கேன். ஒரு இந்திப் படத்துக்கு. டாட்டா!" என்று இரண்டு விரலை வலிக்காமல் ஆட்டி விட்டுப் போயே விட்டார் ரம்பா!

— ஈஸ்வர்தாஸ்

# ஜாம்! ஜாம்!



# டிராஃபிக் ஜாம்!

சுதந்திர தினம்
பொன்விழா ஆண்டு
ஆகஸ்ட் 15-முதல்

ஆசிரியர் : **சாவி**

புதிய நிர்வாகம்



# சாவி

## வார இதழ்

ஜாம் ஜாம் என்று வருகிறது

**விலை ரூ.5/-**

ஸ்ரீரங்கா பப்ளிகேஷன்ஸ், ஏ-20, அண்ணா நகர், சென்னை-600 102.
தொலைபேசி : 6263252, 6216463. ஃபேக்ஸ் : 044-6283242

எல்லா ஊர்களிலும் விற்பனை ஏஜெண்ட்டுகள் தேவை

ADWAVE/SAVI/5431 TAM



# ஸ்டாலின்

சேலம் தி.மு.க. மாநாட்டை ஒட்டி, சென்னையில் எழுதப்பட்டிருக்கும் சுவர் விளம்பரங்களில் கலைஞருக்கு அடுத்தபடியாக, பளிச்சிடுபவர் ஸ்டாலின்.

'தளபதி அழைக்கிறார்; மாநகரத் தந்தை அழைக்கிறார்' என்று கூவிடுகின்றன அழைப்புக்கள். இதைத் தவிர, ஸ்டாலின் படம் போட்ட விளம்பரத் தட்டிகள் வேறு, மூலைக்கு மூலை நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. மொத்த விளம்பரங்களை உற்று நோக்கும்போது, தி.மு.க.வில் கலைஞருக்கு அடுத்தபடியாக ஸ்டாலின்தான் என்ற தோற்றத்தை உருவாக்கும்படியான விளம்பரங்கள்!

கலைஞருக்கு அடுத்தபடியாக, பேராசிரியர், ஆற்காடு வீராசாமி, நாஞ்சிலார் ஆகியோர் இருக்கிறார்களே; அவர்கள் யார் பேரிலும், அழைப்பு விடுக்கப்படவில்லையே' என்று பொது மக்கள் வியந்து கொண்டிருக்கிறார்கள்.

''நடக்கிற ஏற்பாடுகளைப் பார்க்கும்போது, தனக்கடுத்தபடியாக ஸ்டாலினைத் தயார்படுத்துவதற்கான கலைஞரின் முயற்சிகளின் அடுத்தக் கட்டம்தான் சேலம் மாநாடு' என்று கூட நினைக்கத் தோன்றுகிறது'' என்று நம்மிடம் குறிப்பிட்டார் ஒரு த.மா.கா. பிரமுகர்.

இந்த வாதத்துக்கு வலு சேர்க்கும்விதமாக, மாநாட்டு நிகழ்ச்சிகளில் முதல் நாள் இளைஞர் அணியினருக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது!

இதுபோன்ற 'சென்ஸிடிவ் வான' விவகாரத்தில் வெளிப்படை

யாகக் கருத்துச் சொல்ல தி.மு.க.வினர் தயங்கு வதில் வியப்பில்லை.

"தலைமைக் கழகத்திலிருந்து, ஸ்டாலின் பெயரை முன்னிலைப்படுத்தி எல்லா விளம்பரங்களும் செய்யப்பட வேண்டுமென்று எந்த உத்தரவும் போடப்படவில்லை. இப்போது செய்யப்பட்டுள்ள விளம்பரங்கள் எல்லாம் அந்தந்த ஏரியாவில் உள்ள தொண்டர்கள் தாங்களே செய்ததுதான். மேலும் தி.மு.க. தொண்டர்கள் விவரமானவர்கள். 'இதைச் செய், அதைச் செய்' என்று வில்லங்கமான உத்தரவுகள் வருமானால், 'ஏன் செய்ய வேண்டும்?' என்று கேள்வி எழுப்பத் தயங்காதவர்கள். இது தவிர, பேராசிரியர், நாஞ்சிலார், ஆற்காட்டார் பெயரில் செய்யப்பட்ட விளம்பரங்களும் நிறைய உள்ளனவே! கலைஞர் பெயருடன், அந்தந்தத் தொகுதி எம்.எல்.ஏக்கள் பெயரைச் சேர்த்துத்தான் விளம்பரங்களும் செய்யப்படுகின்றன" என்று நம்மிடம் விளக்கினார் தலைமை நிலையப் பிரமுகர் ஒருவர்.

எமர்ஜென்ஸியில், சிறைக்குச் சென்று வந்த பிறகு சுமார் 13 வருடங்கள் தி.மு.க. ஆட்சியிலில்லாதபோது, பட்டி, தொட்டியெல்லாம் போய், கழகப் பிரசாரம் செய்தவர்தான் ஸ்டாலின். இதனால், கிட்டத்தட்ட மாநிலம் முழுவதும் உள்ள கட்சிப் பிரமுகர்கள் ரொம்பப் பழக்கம் அவருக்கு. 1989ல் தி.மு.க. பதவிக்கு வந்தபோது, ஸ்டாலின் அதிகப்படியாக எதிர்பார்க்கவில்லை. தன்னுடைய தொகுதி மக்களை அனுசரித்துச் சென்று மிக நல்ல பெயரைப் பெற்றிருந்தார் அவர். அதே சமயத்தில் கட்சியில் இளைஞர் அணியின் செல்வாக்கு உயர்ந்து கொண்டே இருந்தது.

1996ல் மீண்டும் கழகம் ஆட்சிக்கு வந்தபோது ஸ்டாலின் அமைச்சரவையில் இடம் பெறுவார் என்று எதிர்பார்க்கப்பட்டது.

"முதல்வர் மகன் என்பதால் தகுதியான அவரைப் புறக்கணிக்கக் கூடாது. கட்சிக்காக அவரது உழைப்பைப் பயன்படுத்திய கட்சி அவரைத் தக்கமுறையில் பயன்படுத்த வேண்டும்" என்று பல கழகப் பிரமுகர்கள் கொஞ்சம் வெளிப்படையாகவே சொன்னார்கள்.

இது தவிர நடுநிலைப் பத்திரிகைகள் கூட 'ஸ்டாலினுக்கு அமைச்சர் பதவி ஏன் கொடுக்கக் கூடாது' என்று ஆதரவான வாதங்களை எழுப்பின. இதுபோன்ற வாதங்களால் ஏற்பட்ட உற்சாகங்களின் காரணமாகவோ என்னவோ, ஸ்டாலினை மேயருக்கு நிறுத்த தி.மு.க. முடிவு எடுத்தபோது எந்தவிதமான முணுமுணுப்பும் இல்லை! அவரும் 'சிங்காரச் சென்னை'க்காக உழைத்துக் கொண்டிருக்கிறார்.

"தி.மு.க. ஒரு ஜனநாயக இயக்கம். இந்த இயக்கத்தில் கட்சி ஏணியில் உயரே செல்வதற்கு முறையான வழிகள் இருக்கின்றன. கட்சித் தேர்தல்கள் தவறாமல் நடத்தப்படும் ஒரே கட்சி தி.மு.க.தான். அப்படியிருக்க, வாரிசு அரசியல் என்ற பேச்சுக்கெல்லாம் இடமில்லை. அதே சமயத்தில், ஸ்டாலின் அங்கீகரிக்கப்பட்ட வழிகளில், கட்சியின் சகல தரப்பினரின் ஆதரவைப் பெற்று உயர்நிலைக்கு வருவாரேயானால், அதை யாரும் தடுக்க முடியாது" என்றும் கட்சி வட்டாரத்தில் சிலர் சொல்கிறார்கள்.

இதற்கிடையில், ஸ்டாலின் கோஷ்டி, எதிர் கோஷ்டி என்றெல்லாம் செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன.

"பத்திரிகைகள் உருவாக்கும் இந்தச் செய்திகளைப் பார்க்கும்போது சிரிப்புத்தான் வருகிறது" என்றார் ஸீனியர் தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

போதாததற்கு மாறன் வேறு, அமைச்சர்களின் செயல்பாட்டைப் பற்றிப் பேசிவிடவே, வெறும் வாயில் அவல் மட்டுமல்ல; வெல்லமும் கூட! "ஆனால் தி.மு.க.வைப் பொறுத்த மட்டில், இதுபோன்ற ஏராளமான பிரச்னைகளை அவ்வப்போது சந்தித்து வருவதே வழக்கமாகி விட்டது. இந்த சலசலப்பெல்லாம் கழகத்தின் கட்டுக்கோப்பை ஒன்றும் செய்யாது!" என்று தீர்மானமாகச் சொல்கிறார்கள் அறிவாலயப் பிரமுகர்கள்.

— ப்ரியன்

# :நம்பர் 2?

# வெயிலுக்கு இதம்!

✉ "வெறும் பொருள்களைத் திருமணப் பரிசாகத் தருவதைவிட புத்தகங்களைப் பரிசளிப்பது சிறப்பாக இருக்குமல்லவா!" என்று கூறிய நடிகை மோகினி வாசக உள்ளங்களில் உயர்ந்து நிற்கிறார்.
தக்கோலம், மொ. சையத் அப்துல் காதர்.

✉ மோகினிக்கு பதில் என்னை அழைத்துப் போயிருந்தால் இந்நேரம் வீட்டில் ஒரு குட்டி லைப்ரரியே உருவாகி இருக்கும்.. ஹூம்!
அருகந்தம்பூண்டி, மலை அரசன்.

✉ நூலகங்களுக்கு வெகு காலமாகவே மிகக் குறைந்த அளவிலேயே தமிழ்ப் புத்தகப் பிரதிகளை அரசு வாங்குகிறதென்றும், அவற்றுக்கும் கட்டுப்படியாகாத விலைதான் தருகிறதென்றும் புத்தக வெளியீட்டாளர்கள் பலரும் தெரிவித்துள்ள கண்டனக் கருத்துக்கள் மிகவும் நியாயமானவையாகவே தோன்றுகின்றன. அமைச்சர் அன்பழகன் மட்டுமின்றி, அடிப்படையிலேயே ஓர் எழுத்தாளரான முதல்வர் கருணாநிதியும் இவ்விஷயத்தில் எழுப்பப்பட்டிருக்கும் பிரச்னைகளைக் களைவதில் ஆர்வம் காட்ட வேண்டும்.
நாராயணபுரம், எஸ். வைத்தியநாதன்.

✉ பிறமொழி நூல்களை உரிய விலை கொடுத்து வாங்கும் தமிழக அரசு, தமிழ் இலக்கிய நூல்களையும் பிற நூல்களையும் அடி மாட்டு விலைக்கு வாங்குவது படித்ததும் வேதனையாக இருந்தது.
மேலப்பாதி, எஸ். நாகராஜன்.

✉ நோகடிக்கும் நூலகத்துறை பற்றிய கட்டுரை சோகத்தில் மூழ்கடிக்கிறது. எல்லாப் புத்தகங்களும் அடிமாட்டு விலைக்கு வாங்கப்படும் அவலநிலையும் கலைஞரின் உரை நூல்கூட ஓரங்கட்டப்பட்ட ஓர வஞ்சனையும் கட்டாயம் களையப்பட வேண்டிய களங்கங்கள். பரிசு பெற்ற நூல்கள் பரிந்துரைக்கப்பட்டுங்கூட வாங்கப்படாமலிருப்பது பெரிதும் பரிதாபத்திற்குரியது. அறிவொளி பரப்பிடும் அரிய துறையிலா இப்படி இருட்டடிப்பு இருப்பது?
பொறையாறு, கானா.

✉ டோனி பிளேர் யார் என்று கூடத் தெரியாத நமது அரசியல்வாதிகள் அவர் சொன்னதை எங்கே கேட்கப் போகிறார்கள் என்று முடிவு செய்து, 'ரஜனி சொன்னதைக் கேட்டாவது செயல்படுங்கள்' என்று தலையங்கத்தில் ஆதங்கப்பட்டிருப்பது அர்த்தமுள்ளதுதான்.
ஆலங்குளம், த. அருள்.

✉ ஐந்து பெண்களைப் பெற்றவன் அரசனாயிருந்தாலும் ஆண்டியாவான்' - என்பது பழமொழி. ஐந்து பெண்களை மந்திரிகளாகக் கொண்ட மத்திய அரசு என்ன வாகும் என்பது போகப் போகத் தெரிய வரும்!
காந்திநகர், வே.த. கதிர்வேல்.

✉ ஜெ, திருநாவுக்கரசு கூட்டிய இரு தரப்பு பொதுக்குழு நிகழ்ச்சிகளையும் நானே நேரில் பார்த்து ரசித்த மாதிரி கட்டுரை தந்து விட்டீர்கள். சபாஷ்!
கும்பகோணம்-1, எஸ்.கே. மூர்த்தி.

✉ 'முயன்றால் முன்னேறலாம்'- என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவர் பேராசிரியர் இம்மானுவல் மேக்ஸ். வாழ்க்கையில் உயர நினைப்போருக்கு ஓர் எடுத்துக்காட்டு! அறிய வேண்டிய மாமனிதரை அறியச் செய்தமைக்கு நன்றி.
உடுமலைப்பேட்டை, எஸ். பொன்னுசாமி.

✉ பிரபஞ்சனின் 'ஒத்தாசை'- சிறுகதை நெஞ்சத்தைத் தொட்டது. "யாரும் தனி இல்லை, பூமியில நானா கடைசி மனுஷன்? கடைசி மனுஷன்தானே தனி..." என்று சிவா கூறும் வரிகளில் பொதிந்துள்ள ஆழமான கருத்து, நினைவிற் கொள்ளத்தக்கது. கதையின் பாத்திரப் படைப்புகள் வெகு இயற்கை.
வலையப்பட்டி, எம். பாலசுப்ரமணியன்.

✉ தண்ணீரில் குதித்து, கும்மாளமிடும் குழந்தைகள் படம் (டாப் ஆங்கிள்) வெயிலுக்கு இதமாக இருந்தது. கண்களுக்குக் 'குளு குளு' விருந்து சார்!
நெய்வேலி-3, ப. உத்தண்டராமன்.

## வட்டமேஜை




1997 ஜூன் 29
ஈசுவர ஆனி 15
மலர் : 55
இதழ் : 48

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## கடமை, கண்ணியம், கட்டுப்பாடு!

“சிறு துறைமுகங்களுக்கான திட்டங்கள் உரிய வேகத்தில் நடைமுறைப்படுத்தப்படவில்லை. எப்போது கேட்டாலும் ‘இதோ, அதோ, பரிசீலனையில் உள்ளது, பார்த்துக் கொண்டிருக்கிறோம், கவனித்து வருகிறோம்’ போன்ற பதில்களையே அமைச்சர்களும் அதிகாரிகளும் அளிக்கிறார்கள். மாநில அரசு இப்படி மெத்தனமாய் இருக்காமல் இன்னும் சுறுசுறுப்பாகச் செயல்பட வேண்டும்...” என்று பேசியிருக்கிறார் மத்திய தொழிலமைச்சர் முரசொலி மாறன்.

முதல்வருடன் ஒரே மேடையில் அமர்ந்திருந்தபோது, அவர் இவ்வாறு கூறவும், ‘என் மனச்சாட்சியாக இருந்து பேசியிருக்கிறார் மாறன்’ என்று கருணாநிதி பதில் கூறியிருக்கிறார்.

‘நீ அடிக்கிற மாதிரி அடி; நான் அழுகிற மாதிரி அழுகிறேன்’ என்கிற வழக்கமான அரசியல் கண்துடைப்பாக இந்த நிகழ்ச்சியை நாம் ஒதுக்கிவிட முடியாது.

பல அமைச்சர்கள் - அதிகாரிகள் கூடியிருக்க, பொது மேடையில் நடந்த சம்பவம் இது.

இந்தச் சந்தர்ப்பத்தில் மட்டுமின்றி இதற்கு முன்பாகவும் முதல்வர் தமது அரசு இன்னும் சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியிருப்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்.

எதிர்க்கட்சிகளோ பத்திரிகைகளோ கடுமையாக விமர்சித்தால், வெறுத்துப் போகாமல், திரும்பவும் சொல்லடி கொடுக்காமல், விமர்சனங்களை அணுகி எடை போடும் முதிர்ச்சியும் இப்போது காணக்கிடைக்கிறது.

கடந்த ஓராண்டுக்கும் மேற்பட்ட ஆட்சிக் காலத்தில், தி.மு.க. அரசு வெற்றிகரமாக உள்ளாட்சித்




தேர்தல்களை நடத்தி முடித்திருக்கிறது.

மதுவிலக்கு கொள்கையைத் தளர்த்தி நிதிப் பற்றாக்குறையைச் சமாளிக்கும் குறுக்கு வழியைத் தேர்ந்தெடுக்காமல் தாக்குப்பிடித்திருக்கிறது. ஆண்டவனே ஆணையிட்டாலும் மதுவிலக்கை ரத்து செய்ய மாட்டேன் என்று கூறியுள்ளார் முதல்வர்.

தகவல் பெறும் உரிமைச் சட்டம் சட்டமன்றத்தில் நிறைவேறியிருக்கிறது.

மாவட்ட ஆட்சித் தலைவர்களையும் அதிகாரிகளையும் அழைத்துப் பேசி வேகமாகவும் பாரபட்சமின்றியும் செயல்படும்படி வேண்டியுள்ளார் முதல்வர்.

தென்மாவட்ட ஜாதிக் கலவரங்கள் ஆட்சிக்கு சவாலாக இருந்ததோடு எதிர்க் கட்சிகளுக்கு அவலாகவும் இருந்தன. இந்தப் பிரச்னையில் தமிழக அரசு இன்னும் முன்னெச்சரிக்கையாகச் செயல்பட்டிருக்க வேண்டும் என்பதை நாமும் சுட்டிக்காட்டியிருக்கிறோம்.

எனினும், நிலைமை மேலும் படுமோசமாகி விடாமல் தடுப்பதில் அரசு வெற்றி பெற்றுள்ளது. கலவரப் பகுதிகளுக்குச் சிறப்புக் காவல் படைப்பிரிவை அனுப்பியும் பல்வேறு ஜாதி அமைப்புகள், அனைத்துக் கட்சித் தலைவர்களை அழைத்துப் பேசியும் முதல்வர் சுமுகமான தீர்வுக்கு முயன்றிருக்கிறார்.

மத்தியதர வகுப்பினருக்குப் பொது விநியோக முறையில் தொடர்ந்து அரிசி கிடைக்கும்படி செய்திருப்பதை வரவேற்கலாம். ஆனால் இதர பொருள்களின் விலை உயர்வு தமிழர்களைத் தொடர்ந்து வதைக்கிறது. இதற்கு மத்திய அரசைக் காரணம் காட்டி ஒதுங்க முடியாது. தோழமைக் கட்சியே மத்தியில் ஆட்சியில் இருப்பதால் அவர்களை வற்புறுத்தி விலைவாசிகளைக் கட்டுப்படுத்த தி.மு.க. பாடுபட வேண்டும்.

உள்ளாட்சித் தேர்தல் நடந்து என்ன பயன்? பெரும்பாலான உள்ளாட்சி அமைப்புகளுக்குப் போது மான அதிகாரம் இல்லையே; நகராட்சிப் பணிகளெல்லாம் மிக மெத்தனமாகத்தானே நடக்கின்றன...!

மதுவிலக்கு அமுலில் இருந்தாலும் கள்ளச் சாராயத்தையும் ஒயின் கடை பார்களையும் ஒழிக்க முடியவில்லையே...




தகவல் பெறும் உரிமைச் சட்டத்தில் ஏராளமாய் ஓட்டைகள்... நேர்மையான ஒருவர் எந்தத் தகவலையும் எளிதில் கேட்டுப் பெறக்கூடிய வகையில் அது அமையவில்லையே...

- இப்படியெல்லாம் தி.மு.க. அரசுக்கு எதிரான விமர்சனங்கள் எழுகின்றன.

அந்த விமர்சனங்களில் உண்மையில்லாமலும் இல்லை. ஆனால் கடந்த ஆட்சிக்கும் இந்த ஆட்சிக்கும் இடையிலான முக்கியமான வித்தியாசம் : இந்தக் குறைகளை இவ்வாட்சியே ஏற்று ஒப்புக் கொண்டிருப்பதுதான். அது மட்டுமல்ல, குறைகளைக் களைய முயற்சிகள் மேற்கொள்ளப்படும் என்றும் உறுதியளிக்கிறது.

முதல்வர் பேரிலும் தி.மு.க. ஆட்சி பேரிலும் நம்மை நம்பிக்கை கொள்ளச் செய்வது இந்த வேறுபாடுதான்.

இதென்ன பிரமாதம், விமர்சனங்களைச் சந்திப்பதும் தன்னைத் திருத்திக் கொள்வதும் மக்களின் தேவைகளுக்கு முதன்மை இடம்கொடுப்பதும் ஓர் அரசாங்கத்தின் கடமைதானே? அதைத்தானே கடந்த ஓராண்டுக்கதிகமாக தி.மு.க. ஆட்சி செய்து வருகிறது... என்று விஷயத்தை மிகவும் எளிமையாக்கி, ஒதுக்கி விடலாம்.

ஆனால், இன்று நாடு இருக்கும் நிலையில், சராசரிக்கு மேற்பட்ட நிர்வாகமும், ஊழலுக்கு ஆதரவு தராத உறுதியும் போற்றுதலுக்குரிய அம்சங்களாகி விட்டன.

சேலத்தில் தி.மு.க. மாநாடு நடக்கவிருக்கிற இந்த நேரத்தில் அக்கட்சியின் தலைவர்களுக்கும் தொண்டர்களுக்கும் இதை நாம் நினைவூட்ட வேண்டியிருக்கிறது.

'கட்சிக் கூட்டத்துக்கும் ஆட்சிக்கும் என்ன தொடர்பு..?' என்று கேட்கலாம். ஆட்சியின் சிறப்புக்கும் சரி, அவலத்துக்கும் சரி, கட்சி அரசியல்தான் ஆணிவேர் என்பது நாடறிந்த உண்மை.

ஓர் ஆரோக்கியமான ஆரம்பத்தைக் கண்டிருக்கும் தி.மு.க. ஆட்சி, தொடர்ந்து சிறப்பாகச் செயல்பட வேண்டுமானால் அக்கட்சியைச் சேர்ந்த கடைசி தொண்டன் வரை அனைவரும் ஒத்துழைப்பைத் தந்தாக வேண்டும்.

சேலம் மாநாட்டில் அதற்கான உறுதிமொழிகளை தி.மு.க. தலைவர் கேட்டுப் பெறட்டும்.

**அன்றாட அரசுப் பணிகளோடு, சேலம் மாநாடு தொடர்பான வேலைகளும் சேர்ந்து கொள்ள; முதல்வர் ஏக பிஸி. இந்த நிலையில் முதல்வரின் பேட்டி கிடைக்குமா என்கிற சந்தேகத்தோடுதான் அணுகினோம். இருந்தாலும் நமக்காக நேரம் ஒதுக்கிப் பேட்டியளித்தார், கலைஞர்...**

**கல்கி** : இன்றைய (21.6.97) தினசரிகளில் வந்துள்ள இரண்டு மூன்று செய்திகளைப் பார்க்கும்போது அதிர்ச்சிதரக் கூடியதாகவே இருக்கின்றன. முதலாவதாக, நேற்றைக்கு நடந்த போக்குவரத்துத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம். மக்களுடைய அத்தியாவசியத் தேவைகளில் இப்படியெல்லாம் நடக்கக்கூடாது என்கிற உணர்வைக் கொண்டு வருவதற்கான முயற்சிகளில் நாம் ஈடுபட வேண்டாமா?

**முதல்வர்** : எல்லாவற்றையுமே அரசியலாகச் செய்கிறபோது என்ன செய்ய முடியும்?

**கல்கி** : அரசியல் காரணமாகத்தான் இப்படி நடக்கின்றன என்றால் எல்லா அரசியல் தலைவர்களும் இதுபோன்று நடக்காமலிருப்பதற்கு ஒத்துழைப்புத் தரவேண்டாமா?



**முதல்வர்** : நாங்கள் நடத்திய அரசியலிலும் இப்போது நடத்துகிற அரசியலிலும் இப்படியெல்லாம் நாங்கள் செய்வதில்லை. அண்ணா முதல்வரான சமயத்தில் கூட ஒரு வதந்தி காரணமாக இப்படியொன்று நடந்தது. நேற்றைக்கும் இரண்டு பேர் இறந்து போனதாக ஒரு வதந்தி பரப்பப்பட்டது. அதன் காரணமாகவே



பொறுத்தவரையில் 'கடமைகளை ஆற்றி விட்டு உரிமைகளைப் பெறுவோம்' என்பதுதான். இது நீங்கள் கேட்பதற்காகச் சொல்வதல்ல; ஆரம்பத்திலிருந்தே இப்படித்தான்.

**கல்கி :** த.மா.கா. எம்.எல்.ஏ.வான செல்லக்குமார் மேல் கூட மானநஷ்ட வழக்குப் போட்டிருக்கிறீர்கள். இதனால் உங்களுக்கும் மூப்பனாருக்கும் இடையிலான உறவில் ஏதேனும்...

**முதல்வர் :** அதெப்படி வர முடியும்? செல்லக்குமார் சுமத்திய அந்தக் குற்றச் சாட்டை மூப்பனார் ஒப்புக் கொள்வாரா என்ன? மரம் நடுவதற்கான அந்தத் திட்டத்திற்கு இன்னும் பணமே ஒதுக்கப்பட வில்லை. அதற்குள் அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் அதில் இரண்டு கோடி ரூபாயைச் சாப்பிட்டு விட்டார் என்றால் எப்படி? வீரபாண்டி ஆறுமுகம் கூட செல்லக் குமாரை வருத்தம் தெரிவிக்கக் கூறினார். அவர் தெரிவிக்கவில்லை. வழக்குப் போட்டால் சந்திக்கத் தயார் என்றார். அதனால் தான் போட்டிருக்கிறோம். அப்படிப் போடா விட்டால் அவர் கூறிய குற்றச்சாட்டை ஒப்புக் கொண்டது போல் ஆகிவிடாதா?

**கல்கி :** இப்படிப்பட்ட சூழ்நிலையில் உங்களுக்கும் மூப்பனாருக்கும் இடையிலான நல்லுறவு எப்படி இருக்கிறது?

# "மூப்பனாருடன் எப்போதுமே நல்லுறவுதான்!"

இப்படியொரு திடீர் வேலை நிறுத்தம்.

**கல்கி :** இதில் தி.மு.க. யூனியனைச் சேர்ந்தவர்களும் கலந்து கொண்டார்களே!

**முதல்வர் :** மற்றவர்கள் வேலை நிறுத்தம் செய்கிறபோது இவர்களும் கலந்து கொள்ளத்தானே வேண்டியிருக்கிறது! இல்லையென்றால் இவர்கள் தொழிலாளர்களின் துரோகிகள் ஆகிவிடுவார்களே!

**கல்கி :** மேல்நாடுகளிலுள்ள தொழிற்சங்கத் தலைவர்களெல்லாம் உரிமைகளைக் கேட்கச் சொல்கிற மாதிரியே கடமைகளையும் தொழிலாளர்களுக்குச் சொல்லித் தருகிறார்கள். நமது தொழிற்சங்கத் தலைவர்கள் அப்படிச் செய்கிறார்களா?

**முதல்வர் :** தி.மு.க. தொழிற் சங்கங்களைப்

**முதல்வர் :** எங்களுக்கிடையிலான நல்லுறவு எப்போதும் இருக்கிறது. அந்தக் காலத்தில் காங்கிரஸும் தி.மு.க.வும் சண்டை போட்டுக் கொண்டபோது கூட எனக்கும் மூப்பனாருக்கும் நல்லுறவு உண்டு!

**கல்கி :** இடையில் ஏற்பட்ட சில சந்தேகங்களெல்லாம் தீர்ந்துபோய் விட்டனவா?

**முதல்வர் :** சிலர் கிளப்பினார்கள். அதற்கு அவரும் பலியாகவில்லை; நானும் பலியாக வில்லை.

**கல்கி :** தமிழகத்தின் ஒட்டுமொத்த நலனுக்காக நீங்கள் இருவரும் ஒற்றுமையாக இருக்க வேண்டுமல்லவா?

**முதல்வர் :** நாங்கள் எப்போதும் ஒற்றுமையாகத்தான் இருக்கிறோம். த.மா.காவிலுள்ள

சிலர் எதிர்க்கட்சியாகச் செயல்படுவதில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் கிடையாது. கடந்த சட்டமன்றக் கூட்டத் தொடரில் அவர்கள் எத்தனையோ எதிர்க் கருத்துக்களைக் கூறியிருக்கிறார்கள். நானும் பதில் கூறியிருக்கிறேன். அதில் எந்தவித ஆட்சேபணையும் இல்லை. அதே சமயத்தில் தனிப்பட்ட முறையில் 'சகுனி, சசிகலா' போன்ற வார்த்தைகளைப் போட்டு விமர்சிப்பது சரியானதல்லவே!

**கல்கி :** திருப்பத்தூர் எம்.எல்.ஏ. (தி.மு.க.) சண்முகம் பற்றி ஒரு செய்தி. சந்தனக் கடத்தலில் அவர் சம்பந்தப்பட்டிருப்பதாகவும் அது பற்றி விசாரிப்பதற்கு சி.பி.சி.ஐ.டி. பிரிவுக்கு, கீழுள்ள அதிகாரிகள் அனுப்பியபோது, அது அரசு மட்டத்தில் தடைப்படுத்தப்பட்டதாகவும் செய்தி.

**முதல்வர் :** அப்படியெல்லாம் நடக்காது. செய்தி உண்மையாக இருக்குமானால் அவர் மீது கட்டாயம் நடவடிக்கை எடுக்கப்படும். பாரபட்சம் காட்டப்படமாட்டாது. தி.மு.க.வின் செயற்குழு உறுப்பினர் சையது மீரான். அவர் மீது அரிசிக் கடத்தலில் சம்பந்தப்பட்டதாக வழக்குத் தொடுக்கப்பட்டுள்ளது. மதுரை தி.மு.க. செயலாளர், கொலை வழக்கில் கைது செய்யப்பட்டிருக்கிறார். தவறு செய்பவர்கள் யாராக இருந்தாலும் நடவடிக்கை எடுக்கப்படும்.

**கல்கி :** உங்களது சென்ற ஆட்சிக் காலங்களில் இருந்ததைக் காட்டிலும் தற்போது உங்களுடைய செயல் வேகத்திலும் அணுகுமுறைகளிலும் மாற்றங்கள் காணப்படுகின்றனவே?

**முதல்வர் :** என்ன மாற்றங்கள்? நீங்கள் மகிழத்தக்க மாற்றங்களா இல்லை... (சிரிக்கிறார்)

**கல்கி :** மகிழத்தக்க மாற்றங்கள்தாம்.

**முதல்வர் :** இருக்கக் கூடாது என்கிறீர்களா? (சிரிக்கிறார்). நான் எப்போதுமே ஜனநாயகத்துக்கு மதிப்பளிப்பவன்; எதிர்க்கட்சிகளுக்கு மதிப்பளிப்பவன்; பத்திரிகைகளுக்கு மதிப்பளிப்பவன். பத்திரிகைகளில் வரும் கருத்துக்களுக்கு மதிப்பளித்து உடனடியாக நடவடிக்கைகளை மேற்கொள்பவன். இப்படிப்பட்ட பல சம்பவங்கள் உங்களுக்கே தெரியும். எனவே நான் எப்போதும் ஒரே மாதிரியாகத்தான் செயல்படுகிறேன். அதனால்தான் ராஜாஜியின் அபிமானத்துக்கும் ஆளானேன்.

**கல்கி :** துறைமுகத்தில் நடந்த கூட்டத்தில் அமைச்சர்களைப் பற்றி மாறன் பேசியதும் அவர் 'எனது மனச்சாட்சியாகத்தான் பேசியிருக்கிறார்' என்று நீங்கள் பேசியதும் உங்கள் அமைச்சரவையிலுள்ள அமைச்சர்களுக்கு வருத்தத்தைத் தராதா? தலைவர் தனியாக அழைத்துச் சொல்லியிருக்கலாமே என்று அவர்கள் வருத்தப்பட்டிருக்க மாட்டார்களா?

**முதல்வர் :** அந்தச் சம்பவத்தை நீங்கள் சீரியஸாகவே எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. ஆற்காடு வீராசாமியிடம் எப்போது எதைக் கேட்டாலும் 'ஆன் தி வே சார்!' என்பார். அதை ஒரு அசைச் சொல் மாதிரியே அவர் பயன்படுத்துவார். அதைத்தான் மாறன் அப்படிக் கிண்டல் செய்தார். அவர்களுக்கிடையிலான நட்பு அப்படிப்பட்டது. இது போன்ற கிண்டல்கள் சகஜம்தான். அண்ணா என்னைக் கிண்டல் செய்திருக்கிறார். நான் அன்பிலையும் மன்னையையும் மேடைகளில் கிண்டல் செய்திருக்கிறேன்.

**கல்கி :** ஆற்காட்டாரைப் பற்றி இன்னொன்று. அவருக்கு மின்சாரம், மக்கள் நல்வாழ்வு என்று இரண்டு கனமான துறைகள் இருந்தும் அவர் எப்போதுமே உங்களுடனேயே இருக்கிறார் என்று எதிர்க்கட்சிகள் பரவலாக விமர்சனம் செய்கிறதே?

**முதல்வர்:** தமது துறைகளின் வேலைகளை அவர் திறம்பட கவனித்துக் கொண்டுதான் இருக்கிறார். அவருடைய துறைகளிலுள்ள அதிகாரிகளும் மிகவும் திறமையான அதிகாரிகள். மற்ற அமைச்சர்களின் துறைகளிலும் திறமையான அதிகாரிகள் இருக்கிறார்கள். எனவே எந்தப் பணிகளிலும் தொய்வு கிடையாது. என் பாதுகாப்புக்காகக் கூடுமான வரை என்னோடு இருக்க வேண்டுமென்று அவர் விரும்புகிறார். அவ்வளவுதான்.

**கல்கி:** முந்தைய ஆட்சியில் தவறு செய்த அதிகாரிகள் மீது தற்போது நடவடிக்கைகள் எடுத்திருப்பதால் மற்ற அதிகாரிகள் முடிவுகளை எடுக்கவும் யோசனைகளைக் கூறவும் தயக்கம் காட்டுவதாகச் சொல்லப்படுகிறதே?

**முதல்வர்:** முடிவுகளை எடுக்கத் தயக்கம் காட்டுவது நல்லது தானே!

**கல்கி:** அதனால் பணிகளில் தேக்க நிலை ஏற்பட்டு விடாதா?

**முதல்வர்:** ஒன்றும் ஏற்பட்டு விடாது. கடந்த பட்ஜெட் கூட்டத் தொடரில் நிதி மசோதா நிறைவேறிய மறுநாளே நிதிகள் ஒதுக்கப்பட்டு வேலைகள் துவங்கப்பட்டு

---

"டெண்டுல்கர் ஸ்கோரை நான் கூட்டிகிட்டே வர்றேன்; எனக்கு நூறு வருது. ஆனா ஸ்கோர் போர்டுல அம்பது போட்டிருக்கே!"

"சீப்பிளேல காட்டின ரன்னையும் சேர்த்து கூட்டியிருப்பே!"

– ராதா வாசுதேவன்



விட்டன. கடந்த ஆட்சியில் உள்ளாட்சி மன்றங்களில் மட்டும் 1,50,000 வேலைகளை பாக்கி வைத்து விட்டுச் சென்றிருந்தனர். அவ்வளவையும் இப்போது நாங்கள் செய்து முடித்திருக்கிறோம். முந்தைய ஆட்சிக் காலத்தில் ஆதாயமில்லாத எந்த ஃபைலும் நகராது என்கிற நிலை. அந்த வகையில் பொதுப் பணித்துறை மற்றும் முதல்வருக்கான சுமார் பத்தாயிரம் ஃபைல்கள் தேங்கிக் கிடந்தன. அவற்றையெல்லாம் இப்போது நான் பார்த்து அனுப்பி முடித்திருக்கிறேன். இந்த நிலையில் தீர்க்கப்படாத ஒரு கடன், 'ராக்' என்னும் விளம்பர நிறுவனத்தினர் அரசாங்கம் 25 லட்ச ரூபாய் தர வேண்டுமென்று கேட்கிறார்கள். எதற்காக? 'உலகத்தின் சிறந்த பெண்மணி' யாக அந்த அம்மையார் தேர்ந்தெடுக்கப்பட்டதற்காக பத்திரிகைகளில் விளம்பரம் செய்த செலவு அது. அப்படி விளம்பரம் செய்யச் சொல்லி அரசு சொன்னதற்கான எந்தவிதமான ஆதாரமும் இல்லை. ஆனால் விளம்பரங்கள் வந்திருக்கின்றன.

**கல்கி:** நீங்கள் 25 லட்சம் ரூபாயைக் கொடுத்து விட்டீர்களா?

**முதல்வர்:** இல்லை.

**கல்கி:** தமிழகத்தில்தான் வேலைவாய்ப்பு இல்லாதவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதாக நீங்களே வருத்தத்தோடு சொல்லியிருக்கிறீர்கள். அதைக் களைய என்ன வழி?

**முதல்வர்:** நிறையத் தொழிற்சாலைகள் கொண்டு வருவதுதான். செய்து கொண்டிருக்கிறோமே!

**கல்கி:** தொழிற்சாலைகள் நகரங்களை யொட்டியே அமைவதால் கிராமப்புறங்களிலுள்ளவர்களுக்கு வேலை வாய்ப்புத் தருகிற மாதிரி திட்டங்கள் உள்ளனவா?

**முதல்வர்:** அவர்களுக்காகத்தான் 'அண்ணா மறுமலர்ச்சித் திட்டம்', 'நமக்கு நாமே' என்கிற திட்டம். இந்த இரண்டு திட்டங்களும் இம்மாதம் 26ம்தேதி துவக்கி வைக்கப்படுகின்றன.

**கல்கி:** இப்போதுள்ள பிரச்னைகளில் மிக முக்கியமான– முதன்மையான பிரச்னையாக நீங்கள் எதைக் கருதுகிறீர்கள்?

**முதல்வர்:** ஜாதிச் சச்சரவும் வன்முறைகளும் சமூக விரோதச் செயல்களும்தான்.

**கல்கி:** பெரியார் வாழ்ந்து எவ்வளவோ பிரசாரம் செய்த தமிழகத்தில் ஜாதியின் பெயரால் கலவரம் நடப்பதென்பது...

**முதல்வர்:** இது காந்தி பிறந்த மண். அவரையே வன்முறை பலி வாங்கவில்லையா? இந்திரா காந்தி, ராஜீவ் காந்தி ஆகியோரும் பலியாகவில்லையா?

**கல்கி:** அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் மாவட்டங்களுக்கும் போக்குவரத்துக் கழகங்களுக்கும் வைக்கப்பட்ட தலைவர்களின் பெயர்களை நீக்குவது பற்றி ஏறத்தாழ எல்லாக் கட்சிகளுமே ஒப்புக் கொண்ட நிலையில் 'இதுபோன்ற உத்தரவில் நான் கண்ணீரோடுதான் கையெழுத்திடுவேன்' என்று நீங்கள் பேசியது, பின் வாங்குவது போல் இல்லையா?

**முதல்வர்:** அண்ணா மறைந்து ஏழு ஆண்டுகள் நான் முதல்வராக இருந்தேன். அப்போது நான் அவருடைய பெயரை எந்த மாவட்டத்துக்கும் வைக்கவில்லை. பெரியார் மறைந்து மூன்று ஆண்டுகள் நான் முதல்வராக இருந்தும் அவருடைய பெயரையும் நான் வைக்கவில்லை. போக்குவரத்துக் கழகங்களுக்குக் கூட திருவள்ளுவர், பல்லவன், சேரன், சோழன், பாண்டியன் என்றுதான் வைத்தேன். பிறகு அண்ணா, பெரியார் பெயர்களை நான் போக்குவரத்துக் கழகங்களுக்கு வைத்தேன் என்றாலும் மாவட்டங்களுக்கு வைக்கவில்லை. காரணம், பின்னால் பிரச்னைகள் வரும் என்பதுதான். எம்.ஜி.ஆர்.தான் மாவட்டங்களுக்குத் தலைவர்களின் பெயர்களை வைக்கிற வழக்கத்தை ஆரம்பித்து வைத்தார். எதிர்க் கட்சித் தலைவராக நான் இருந்த அந்த நேரத்தில் அவரிடமே இது பற்றிப் பேசியிருக்கிறேன். அவர் நல்ல நோக்கத்தோடுதான் வைத்தார் என்றாலும் அதுவே பிற்பாடு முதுமலையிலுள்ள வனவிலங்கு சரணாலயத்துக்குக் கூட 'ஜெயலலிதா தேசிய வனவிலங்குப் பூங்கா' என்று பெயர் வைக்கிற அளவுக்குப் போய்விட்டது... என்ன செய்வது?

**கல்கி:** கடந்த ஓராண்டில் நீங்கள் எவ்வளவோ செய்திருந்தாலும் மிகவும் முக்கியமான சாதனையாக நீங்கள் எதைக் குறிப்பிடுவீர்கள்?

**முதல்வர்:** இதுவரை பட்டதாரிகளே இல்லாத குடும்பங்களிலிருந்து வருகிற– அவர்கள் எந்த ஜாதியாக இருந்தாலும் சரி– மாணவர்களில் நல்ல ரேங்க் வாங்குபவர்கள் பத்து பேர் மருத்துவம், பொறியியல் போன்ற தொழிற்கல்வியை அவர்கள் விரும்புகிற கல்லூரியில் சேர்ந்து படிக்கலாம். அந்த முழுச் செலவையும் அரசே ஏற்றுக் கொள்ளும். இதனை மிக முக்கியமான சாதனையாக நான் கருதுகிறேன்.

**கல்கி:** கல்வி என்றதும் இன்னொன்று

## ஏன் கறுப்பு – சிவப்பு?

**தி.மு.க. கட்சிக் கொடியில் உள்ள கறுப்பும், சிவப்பும் குறிப்பது என்ன? அரசியல், பொருளாதார, சமுதாய சூழ்நிலை இருண்ட நிலையில் இருப்பதை உணர்த்தும் குறியீடுதான் கறுப்பு.**

**இந்த இருண்ட நிலையைப் போக்கும் ஒளி நிலையாக இருப்பதுதான் சிவப்பு.**

**– ஆர்.எஸ்.வி.**

நினைவுக்கு வருகிறது. இந்த ஆண்டு +2 தேர்வில் நிறைய தவறுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. விடைத்தாள்களை மறுமதிப்பீடு செய்யக் கோரியதில் 300 பேருக்குத் தவறுகள் நடந்திருப்பது தெரிய வந்துள்ளது. ஒருவேளை இதற்கு மேலும் தவறுகள் நடந்திருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது...

**முதல்வர்:** சென்ற ஆண்டும் 400 பேருக்கு இப்படிப்பட்ட தவறுகள் நடந்துள்ளன. அதற்கு முந்தைய ஆண்டும் நடந்துள்ளன. கடந்த ஏழெட்டு ஆண்டுகளாகவே இப்படி நடந்து கொண்டுதான் வருகின்றன. இந்த ஆண்டு 300 பேர். அதற்காக, தோல்வியுற்ற மாணவர்கள் பெற்றோரைத் திருப்திப்படுத்துவதற்காக மறுமதிப்பீடு செய்யக் கோருவதை ஏற்க முடியாது. ஆசிரியர்களின் குறைபாட்டால் தவறுகள் நடந்துள்ளன. இதற்காகச் சம்பந்தப்பட்ட ஆசிரியர்கள்மேல் நடவடிக்கை எடுத்தால் உடனே ஆசிரியர்கள் போராட்டம் ஆரம்பித்து விடும்... (சிரிக்கிறார்)

**கல்கி:** போலீஸாரின் செயல்பாடுகள் திருப்திகரமாக உள்ளனவா?

**முதல்வர்:** இல்லை. இன்னமும் 'மாமூல் வாழ்க்கை' தொடர்கிறது. (சிரிக்கிறார்). மது பானக் கடைகளில் 'பார்' வைக்க அனுமதி இல்லை. ஆனாலும் 'பார்' நடந்து கொண்டுதான் உள்ளது. காரணம், மாமூல். லட்சக் கணக்கில் வாங்குகிறார்கள் என்பது எனக்குத் தெரியும். பேசாமல் 'பார்' வைக்க அனுமதி கொடுத்து விடலாம் என்றாலோ கல்கியில் தலையங்கம் எழுதுவீர்கள்... (சிரிக்கிறார்).

**கல்கி:** எலிக்குப் பயந்து கொண்டு வீட்டைக் கொளுத்துவதா என்கிற கேள்வி நியாயமான கேள்வியாகத்தானே இருக்க முடியும்?

**முதல்வர்:** நியாயமான கேள்விதான்! என்ன செய்ய முடியும்? அதை எப்படி நீக்குவது என்று தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறோம்.

**கல்கி:** பதவியிலுள்ளோர் ஊழல் செய்தால் அதை விசாரிப்பதற்காக 'ஆம்புட்ஸ்மான்' அமைப்பு கொண்டு வரப் போவதாகச் சொன்னீர்களே, அது எந்த அளவில் இருக்கிறது?

**முதல்வர்:** மத்தியில் 'லோக்பால்' அமைப்பு கொண்டு வரப்படுவதால் அதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

**கல்கி:** நீங்கள் வாரம் ஒருநாள் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று மருத்துவர்கள் ஆலோசனை வழங்கினார்களே, நீங்கள் உண்மையிலேயே அப்படி எடுத்துக் கொள்கிறீர்களா?

**முதல்வர்:** வாரம் எடுத்துக் கொள்கிறது. நான் எடுத்துக் கொள்ளவில்லை! (சிரிக்கிறார்)

**கல்கி:** ஓய்வு என்பது ஒரு முக்கியமான விஷயமில்லையா?

**முதல்வர்:** மத்தியான வேளைகளில் அரை மணி, முக்கால் மணி தூங்கி விடுவேன். பிறகு இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் தூங்கி விடுவேன்! (சிரிக்கிறார்).

**கல்கி:** அதிகாலையிலேயே எழுந்து விடுவீர்களே?

**முதல்வர்:** ஐந்து மணிக்கு எழுந்து விடுவேன். எழுந்ததும் வாக்கிங். பிறகு யோகாசனம். யோகாசனம் செய்யாத அன்று எண்ணெய் மசாஜ் செய்து கொள்கிறேன்.

**கல்கி:** சேலத்தில் இப்போது நடக்கிற மாநாடு, சிறப்பு மாநாடு என்று அழைக்கப்படுகிறது. அப்படியென்ன சிறப்பு?

**முதல்வர்:** வழக்கமாகத் தி.மு.க.வின் தலைவர் தேர்தல் நடந்த பிறகு மாநாடு நடக்கும். ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை நடக்கும் அதற்குப் பொது மாநாடு என்று பெயர். இப்போது தேர்தல் கமிஷன் சொன்னதற்கிணங்க – வழக்கமாக நடக்கும் தி.மு.க.வின் உட்கட்சித் தேர்தலுக்கு இன்னும் ஆறு மாதங்கள் இருக்கின்ற நிலையிலும் – அடுத்த மாத இறுதியில் தி.மு.க.வின் தலைவர் தேர்தல் நடக்க இருக்கிறது. அதன் பிறகு மாநாடு நடத்த நேரம் இருக்காது என்பதால், இப் போது நடக்கிறது. தலைவர் தேர்தலுக்கு முன்பே இது நடப்பதால் இது சிறப்பு மாநாடு. அவ்வளவுதான்.

**கல்கி:** இந்த மாநாட்டின் மூலம் மக்களுக்கு நீங்கள் சொல்லப்போகும் செய்தி என்ன?

**முதல்வர்:** அதெப்படி மாநாட்டுக்கு முன்பே நான் சொல்ல முடியும்?

**கல்கி:** ஒரு கோடியாவது காட்டக் கூடாதா?

**முதல்வர்:** 'கோடி'யெல்லாம் நீங்கள் போயஸ் கார்டனுக்குப் போனால்தான் பார்க்க முடியும்!

(முதல்வரோடு சேர்ந்து நாமும் சிரிக்க, முதல்வரின் அறையே சிரிப்புக் களமானது!)

படங்கள்: **யோகா**

அட்டை வண்ணப்படம்: **பிரவீண்குமார்**

## படித்ததில் பிடித்தது:

# நினைவில் ஒலிக்கிறது கவிதை!

### ஒரே கதை; இரண்டு நாவல்கள்




எழுத்து பலருக்குப் பொழுது போக்கு. சிலருக்குத் தவம். படிப்பதும் கூட. எழுத்துத் தவம் மேற்கொள்பவர்கள் கதையின் கருவுக்காக, ஏன் ஒரு சொல்லுக்காகவும் கூடக் காத்திருப்பார்கள்.

அப்படிப்பட்ட எழுத்து யோகி லா.ச.ரா. அப்படி எழுத ஒரு மனநிலை வேண்டும். அந்த மன அலைவரிசையில் உலவ முடியாத வாசகர்கள் அவரை உணர்வது கொஞ்சம் கஷ்டம். அப்படி உணர முடியாதவர்களுக்காகவும் இரங்கி, இறங்கி அவர் அளித்துள்ள படைப்புக்கள் இந்த இரட்டை நாவல்கள்.

பிராயச்சித்தத்தை முழுமையாக உணர கல் சிரிக்கிறதைக் கட்டாயம் படித்திருப்பது நல்லது. ஒரு மர்ம நாவலின் சுவாரஸ்யம், மனித நேயக் கதையின் கனிவுகள் இரண்டையும் கலக்க முடியுமா? 'கலக்கி'யிருக்கிறார் லா.ச.ரா. கோமதி- தர்மராஜனின் கத்தி முனை உறவு, சரியில்லாத கோமதியின் சராசரிக் கணவர், 'என்னை இங்கிருந்து அழைச்சிண்டு போயிடுங்களேன்' (கல்யாணம் பண்ணிக்கோங்களேன் என்று அல்ல) என்று வேண்டிக் கொள்ளும் பாலைவன ரோஜா மரகதம். தொட்டிலில் ஆறுமாதக் குழந்தையாக இருந்தபோது, தர்மராஜன் மார்பில் உதைத்த மது. 'இஷ்டப்பட்டதைக் கொடுங்கள். நான் ரெட்டுப் பேச மாட்டேன்' என்று கடைசியில் மார்பில் மிதிக்கும் அவலம். தன் உயிரைப் பறித்ததாகக் குற்றம் சாற்றப்படவிருக்கும் தர்மராஜனுக்கு உயிலில் இடம் கொடுக்கும் சேட், அம்பாள் பூஜை 'உண்டைக்கட்டி'க்கு உரிமை கொண்டாட வந்துவிட்டான் ஒருவன் என்று அஞ்சும் ஏழைக் குருக்கள் இப்படிப் பல பாத்திரங்கள்... பழக்கமான பாத்திரங்களையும் புதிய பாலீஷுடன் எழுத்துக் காமிராவில் பிடித்து அடைத்து வைத்திருக்கிறார்!

முதல் கதையில் ஆரம்பத்தில் அறிமுகமாகும் குருக்கள் பற்றியதுதான் கதை என எதிர்பார்க்க வைத்து ஏமாற்றியிருக்கிறார் லா.ச.ரா. 'ஏமாறச் சொன்னது நானா?' என்பார் அவர்.

கதை படிக்கும்போது இடையில் கவிதை ஒலிக்குமா? ஒலிக்கிறது, பல இடங்களில். ஒரே உதாரணம்:

நக்ஷத்திரங்கள் விம்முகின்றன — கேட்கிறது.

நிலவின் தேன் அடி நாக்கில் — ஊறுகிறது.

லா.ச.ரா.வின் படைப்புகளில் இது வண்டி வண்டியாய்க் கிடைக்கும். இந்த நாவல்களிலும் கொஞ்சம் கிடைக்கிறது.

**— ஆர்.பி. சாரதி**




கல் சிரிக்கிறது (ரூ.20) பிராயச்சித்தம் (ரூ.30.)/ லா.ச.ரா/ வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, சென்னை-17.

## பார்வைக்கு வந்தவை

● **மைத்ரீம் பஜத / ரா. கணபதி/ திவ்ய வித்யா பதிப்பகம், 106/1, அபிபுல்லா சாலை, சென்னை - 17/ ரூ.20**
காஞ்சிப் பெரியவருடனான அனுபவங்கள். கதை போல சுவாரஸ்யம் தரும் இனிய கட்டுரைகள்.

● **ஞானக்கவி ராமலிங்கர் / புரசு பால கிருஷ்ணன் / நேஷனல் புக் டிரஸ்ட், ஏ-5 கிரீன்பார்க், புதுதில்லி - 110016/ ரூ.21**
வள்ளலாரின் வாழ்க்கை வரலாறும் பக்தி இலக்கியப் பணியும். ஆழமான பார்வை நூலின் சிறப்பு.

● **காமம் செப்பாது / பொன்னீலன் / ஜீவா பதிப்பகம், 36. ஈசானி மூர்த்தி கோவில் தெரு, சென்னை - 19/ ரூ. 30**
மிக அருமையான பதினைந்து சிறுகதைகள். மயக்கும் நடை.

● **ஆங்கிலக் கவிஞர்களின் சிந்தனைகள்/ திருவரக / திருவரக புத்தக நிலையம், 13. தீனதயாளு தெரு, சென்னை - 12/ ரூ.35**
சின்னச் சின்ன சிந்தனைத் தெறிப்புகள். அறிஞர்களின் பெயர்கள் பல நாம் அறியாதவை.

● **ராமானுஜர் / இந்திரா பார்த்தசாரதி/ தமிழ்ப் புத்தகாலயம், 11. சிவப்பிரகாசம் தெரு, தி. நகர், சென்னை-17/ ரூ.27**
சமயப் புரட்சியாளர் ராமானுஜர் பற்றிய நாடகம். விறுவிறுப்பான தமிழ். சம்பிரதாய சரித்திர - புராண நாடகங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட நவீன விருந்து.

● **நீங்களும் பேச்சாளராகலாம் / குமரி அனந்தன் / வானதி பதிப்பகம், சென்னை-17/ ரூ.55**
பேச்சுக்கலையைப் பாடமாக போதிக்கிற நூல். மேற்கோள்களெல்லாம் மிக அழகானவை. மேடைப் பேச்சு பழகுபவர்களுக்கு உபயோகமான நூல்.

● **அறிவோமா ஆன்மீகம் / வைரம் ராஜகோபால் / கங்கா-காவேரி, 17. காரியாங்குடி செட்டித் தெரு, வெளிப்பாளையம், நாகைப்பட்டிணம்-611001/ ரூ. 20.**
ஒரு வார இதழில் வெளியான ஆன்மீகக் கேள்வி பதில்கள்.



''என்னங்க இது! பொண்ணுக்குத் தீக்ஷிதர் கிருதி தெரியும்னீங்களேன்னு பாடச் சொன்னா, சோளி கே பீச்சே க்யா ஹைற'ன்னு பாடுது!''

''...ஹி...ஹி... இது மாதுரி தீக்ஷிதர் கிருதிங்க!''

— மேல்மங்கலம் பத்ரா



"இந்தப் படத்தின் நடுவுல திடீர் திடீர்னு சம்மந்தமே இல்லாமல் 'நாம் இருவர், நமக்கு இருவர்; இல்லறமே நல்லறமாய் வாழ்வோர்க்கு என்றுமில்லை எய்ட்ஸ் பயம்'னு சொல்றாங்க?"

"படத்துல ஒரு மெஸேஜும் இல்லைன்னு விமர்சனம் வந்துடக் கூடாதேன்னுதான்...!"

பாஸு



''எதுக்காக தலைவர் கட்சி மாறினார்?''

''கட்சியில அவர் மட்டும் தன்னந்தனியா இருக்க பயமா இருந்துச்சாம்; அதான்!''

— கீழை அ. கதிர்வேல்

மகளின் முடியில் கொஞ்சம் தரவேண்டும் என்ற பேஜின் கோரிக்கையைக் கேட்டு அந்த நர்ஸ் திகைத்தபோதிலும் அந்தத் தாயின் தாபம் அவனுக்குப் புரிந்தது.

"நிச்சயமாய்க் கொஞ்சம் எடுத்து வைக்கிறோம்," என்று உறுதியளித்தான். அதன் பின்னரும் ஆலிஸனைப் பிரிந்து செல்லப் பேஜினால் முடியவில்லை. மறுபடியும் மறுபடியும் மகளின் காதருகே குனிந்து, "ஆலி... என் கண்ணம்மா... உன் மீது எப்பவும் பிரியமடி, கண்ணே... எப்பவும்... எப்பவும்..." என்றாள்.

ஆலிஸன் குழந்தையாக இருந்த போது இந்த வார்த்தைகளை அடிக்கடி அவள் சொல்வது வழக்கம். பேஜுக்கு அது ஞாபகம் வந்தது. நினைவற்றுக் கிடக்கும்

மூலம் :
டேனியல் ஸ்டீல்



# 12

ஆலிஸனுக்கும், அவளுடைய உடம்பின் ஏதோவொரு கோடியில் அந்த நினைவு தங்கியிருக்கும்...

தன்னைத்தானே அந்தக் கட்டிலிலிருந்து கிழித்து விடுவித்துக் கொள்கிற மாதிரி வலுக்கட்டாயமாக வெளியேறினாள் பேஜ். கண்களிலிருந்து பொங்கிப் பொங்கி வந்து கொண்டிருந்தது கண்ணீர். குழந்தையை மறுபடி உயிரோடு பார்ப்போமோ இல்லையோ என்று நினைக்கும்போதே வேதனை பிடுங்கி யெடுத்தது. இல்லை, இல்லை... ஆபரேஷன் மூலம் அவளைக் காப்பாற்றக்கூடிய வாய்ப்பு இருக்கிறது என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு மனசைத் திடப்படுத்திக் கொண்டு வெளியே வந்தாள்.

**வெ**ராந்தாவில் தாரென்ஸன் அவளுக்காகக் காத்திருந்தான். அவளைப் பார்க்கையில் அவன் இதயம் வலித்தது. எப்படிப்பட்ட நரகத்தில் அவள் உழல்கிறாள் என்பதை அவள் முகமே காட்டியது. பேய் பிடித்த மாதிரி அல்லவா இருக்கிறாள்!

ஆலிஸனின் அறைக்குள் அவள் நுழைந்தபோது, கதவு திறந்து மூடிய போது, ஆலிஸனை அவனும் பார்த்தான். அந்த ஒரு வினாடியே அவன் இதயம் பிளந்து விட்டது. அவனுடைய மகள் க்ளோவும் பலத்த காயங்களுடன்தான் கிடக்கிறாள். ஆனால் ஆலிஸனின் அளவுக்குப் பயங்கர மோசமில்லை. டாக்டர்கள் சொன்னதை அவனும் கேட்டிருந்ததால், ஆலிஸன் பிழைப்பது துர்லபம் என்று அவனுக்குத் தோன்றியது.

**தமிழில் : ரா. கி. ரங்கராஜன்**

"ரொம்ப வருத்தமாயிருக்கிறது, பேஜ்," என்று அவன் தோள்களைப் பிடித்துக் கொண்டு சொன்னான். பேஜ் எதுவும் சொல்லவில்லை. வெகு நேரத்துக்கு நின்றவாறே அழுது கொண்டிருந்தாள். அழுவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும் அவளால்?

முடிவேயில்லாத கொடுமையாக இரவு நீண்டு கொண்டே போயிற்று. அப்படிப்பட்ட ஓர் இரவு அவர்கள் இருவருடைய வாழ்க்கையிலும் வந்ததே கிடையாது.

ஆலிஸனுக்கு ஆபரேஷன் நடந்து கொண்டிருக்கிறது என்பது ஒன்றுதான் அவள் நினைவில் நின்றது. நடுவில் ஒரு நர்ஸ் வந்து சிகிச்சை நல்லபடி நடப்பதாகச் சொன்னாள். ஆனால் இன்னும் பல மணி நேரம் ஆகும் என்று தெரிவித்தாள்.

ஆபரேஷனுக்குச் சம்மதிப்பதாகப் பேஜ் எழுதித் தர வேண்டிய ஃபாரங்கள் வந்தன. அவற்றில் கையெழுத்திட்டுக் கொடுத்தனுப்பினாள்.

"வா, ரெஸ்டாரெண்ட்டுக்குப் போய் ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டு வரலாம்," என்றான் தாரென்ஸன்.

"ஊகூம். காப்பி வேண்டாம்," என்றாள் அவள்.

"சரி, கொஞ்சம் தண்ணீராவது குடித்து விட்டு வரலாம் வா. இடம் மாறினால் நல்லது. இன்னும் ரொம்ப நேரமாகும் ஆபரேஷன் முடிய," என்றான் அவன். பன்னிரண்டு முதல் பதினாறு மணி நேரம் வரை பிடிக்கும் என்று தலைமை சர்ஜன் சொல்லியிருந்தார்.

"விடிகாலை நாலு மணியாகிறது. வீட்டுக்கு வேண்டுமானால் போய்க் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டு விட்டு வாயேன்," என்றான். அவன் குரலில் கவலை நிரம்பியிருந்தது.

கடந்த எட்டு வருடத்தில் தங்களுக்குள் ஏற்பட்டிருந்த நெருக்

'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்



"காலம் ரொம்ப கெட்டுக் கிடக்கு."
"எப்படிச் சொல்றீங்க?"
"ஒருத்தன் லீவு வேணும். என்ன காரணம் எழுதறதுன்னு தெரியலை. நீங்களே எழுதிக் கிங்கன்னு லெட்டரைக் கொடுத்திட்டுப் போறான்!"
- வெ. ராஜாராமன்

கத்தை விட அதிகமான நெருக்கம் இந்தச் சில மணி நேரத்தில் ஏற்பட்டிருப்பதாகத் தோன்றியது பேஜுக்கு. துணைக்கு அவன் இருப்பது குறித்து அவள் நெஞ்சு நன்றி பாராட்டியது. 'இவர் மட்டும் இப்போது இல்லையென்றால் நமக்குப் பைத்தியமே பிடித்திருக்கும்' என்று எண்ணிக் கொண்டாள்.

"இல்லை. எனக்கு வீட்டுக்குப் போக மனமில்லை," என்றாள். அவள் மனநிலை தாரென்ஸனுக்குப் புரிந்தது. அவனுக்கும் க்ளோவை விட்டு விட்டுப் போக இஷ்டமில்லை. ஆனால் அவனைப் பொறுத்தமட்டில் வீட்டில் மூத்த மகன் நிக் இருக்கிறான். உடம்பு சரியில்லாத சின்னப் பையன் பிஜானை அவன் கவனித்துக் கொள்வான். நிலைமையை ஓரளவு நிக்கிடம் எடுத்துச் சொல்லி விட்டுத்தான் ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தான்.

பேஜ் விஷயம் அப்படியல்ல. அவளுடைய பையன் ஆண்டியைப் பார்த்துக் கொள்ள அங்கே யாரும் கிடையாது. அம்மாவும் இல்லாமல் அக்காவும் இல்லாமல் அவன் பயந்து போவானே, பாவம். ஆகவே பேஜ் தன் வீட்டுக்குப் போய்விட்டு வந்தால் நன்றாயிருக்கும் என்று தோன்றியது. ஆனால் பேஜ் சம்மதிக்கவில்லை.

ரொம்ப வற்புறுத்தியபின், அரை மனதாக மருத்துவமனையில் இருந்த ரெஸ்டாரென்ட்டுக்குப் பேஜ் வந்தாள். அங்கே இருவரும் காப்பி சாப்பிட்டுக் கொண்டிருக்கையில், "ஆண்டியை யாரிடம் விட்டு விட்டு வந்தாய்?" என்று தாரென்ஸன் கேட்டான்.

"பக்கத்து வீட்டில் ஜேன் என்று என் சிநேகிதி இருக்கிறாள். அவளை என் வீட்டில் இருக்கச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். ஆண்டிக்கு அவளைப் பிடிக்கும். அதனால் காலையில் அவன் எழுந்து கொள்ளும்போது பிரச்னை இருக்காது. வேறு வழியில்லை. இப்போது எப்படி வீட்டுக்குப் போவது?" என்று பெருமூச்சு விட்டவள், "பொழுது விடிந்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பிராட் எங்கே இருக்கிறார் என்று கண்டுபிடித்துத் தகவல் சொல்ல வேண்டும். அதுதான் என் ஒரே கவலை. போகிற இடத்தின் டெலிபோன் நம்பரைக் குறித்து வைக்க அவர் மறந்து போனது, இந்தப் பதினாறு வருடத்தில் இதுதான் முதல் தடவை," என்றாள்.

"சில சமயம் அப்படித்தான் நேரிட்டு விடுகிறது," என்றான் தாரென்ஸன்.

"பிராடிடம் என்ன சொல்லப் போகிறேன், எப்படிச் சொல்லப் போகிறேன் என்றே புரியவில்லை. அவருக்கு ஆலியிடம் எக்கச்சக்கமான பாசம். ஆலிக்கும் அப்படித்தான். அப்பா என்றால் உயிர்..."

"நம் எல்லாருக்குமே இது மகா பயங்கரமான இரவு, பேஜ். காரை ஓட்டி வந்து இறந்து போனானே அந்தப் பையன் பிலிப், அவனுடைய அப்பா அம்மாவுக்கு எப்படி இருக்கும், பாவம்," என்றான் தாரென்ஸன். அப்படிச் சொன்ன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவர்களே வந்து விட்டார்கள்.

சாப்மனுக்கும் அவர் மனைவிக்கும் நாற்பத்தைந்து, ஐம்பது வயதிருக்கும். வசதி படைத்தவர்கள் என்பது அவர்கள் தோற்றத்திலேயே தெரிந்தது. ஆனால் கதிகலங்கி ஆடிப் போயிருந்தார்கள் இருவரும். வெளியூருக்குச் சென்றிருந்தவர்கள், செய்தி கிடைத்ததும் உடனே புறப்பட்டுக் காரில் நெடுந்தூரம் பயணம் செய்து வந்து சேர்ந்திருந்தார்கள். விபத்தில் பிலிப் இறந்து போனான் என்பதை அவர்களால் நம்பவே முடியவில்லை. அவன் அவர்களுடைய ஒரே குழந்தை. கல்யாணமாகிப் பல வருடங்கள் கழித்துப் பிறந்த பிள்ளை.

விபத்தைப் பற்றி டாக்டர் அவர்களிடம் விவரித்துக் கொண்டிருந்தபோது, மிஸஸ் சாப்மன் தலையைக் குனிந்தபடி அழுது கொண்டிருந்தாள். சாப்மன் அவள் இடையை அணைத்துக் கொண்டு வாய் விட்டே அழுதார்.

"கார்கள் மோதிய வினாடியிலேயே பிலிப் இறந்து விட்டான். தலையில் அடிபட்டு, கழுத்தும் முதுகு எலும்பும் முறிந்து விட்டதால் பிழைத்திருக்கச் சான்ஸே இல்லை," என்றார் டாக்டர்.

ரத்தப் பரிசோதனை செய்தபோது பிலிப்பின் ரத்தத்தில் ரொம்பக் குறைந்த அளவுக்கு ஆல்கஹால் இருந்தது தெரியவந்ததென்று டாக்டர் தெரிவித்தார். "சட்டப்படி அது அப்படியொன்றும் அதிக அளவு இல்லை. ஆனால் சிறு வயதுப் பையனாக இருப்பதால் அதுவே

அதிகமாக இருக்கலாம். அதை வைத்து விபத்துக்கு அவன்தான் காரணம் என்று சொல்ல முடியாது. யார் மீது யார் மோதினார்கள் என்பது இன்னும் தெரியவில்லை. அந்த மற்றக் காரை ஓட்டி வந்தவர் செனேட்டர் ஹட்சின்ஸின் மனைவி லாரா. உங்கள் பிள்ளை இறந்து போனதில் ரொம்பவும் அதிர்ச்சியடைந்திருக்கிறாள்..."

யார் அதிர்ச்சி அடைந்து என்ன? போன பிள்ளை போனவன்தான்.

அழுதவண்ணம் கேட்டுக் கொண்டிருந்த சாப்மனின் மனைவி மேரிக்கு, பிலிப் ஒரு வேளை குடிபோதையில் இருந்திருக்கலாம் என்கிற மாதிரி டாக்டர் சொன்னதைக் கேட்டுக் கோபம் வந்தது.

"அந்த அம்மாளுக்கு ரத்தப் பரிசோதனை செய்தார்களா?" என்று கேட்டாள்.

"இல்லை. அவர் நிதானத்தில் இருந்தார் என்று போலீசில் நிச்சயமாகச் சொல்கிறார்கள்..." என்று டாக்டர் சொன்னவுடன் மேரிக்கு மட்டுமல்ல, சாப்மனுக்கும் கடும் கோபம் ஏற்பட்டது. அவர் ஒரு சிறந்த வழக்கறிஞர். தன் மகனைப் பரிசோதனை செய்திருக்கிறார்கள்... குடிபோதையில் இருந்திருக்கலாம் என்று சந்தேகப்பட்டிருக்கிறார்கள்... ஆனால் செனேட்டரின் மனைவியிடம் மட்டும் எந்த விசாரணையும் செய்யாமல் விட்டிருக்கிறார்கள். எத்தனை பெரிய அநீதி!

"என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? என் பிள்ளை பதினேழு வயதுப் பையன் என்பதால், அவன் அரை கிளாஸ் ஒயினோ அல்லது அது மாதிரி ஏதாவதோ குடித்திருந்தால் அவன் மீது சுலபமாய்க் குற்றம்சாட்டி விடலாம். அதே சமயம் ஒரு பெரிய பெண் பிள்ளை, எவ்வளவு குடித்திருந்தாலும், குடிபோதையில் கார் ஓட்டி விபத்து ஏற்படுத்தியிருந்தாலும் அவளை விட்டு விடலாம். ஏனென்றால் அவள் ஒரு அரசியல்வாதியின் பெண்டாட்டி. அப்படித்தானே?" என்று இரைந்தார்.

"என் பிள்ளையை எனக்குத் தெரியும்!" என்று உறுமினார் சாப்மன். "அவன் குடிக்கிறவனேயில்லை. அப்படியே குடித்தாலும் ரொம்ப ரொம்பக் கொஞ்சமாக ஒயின்தான் குடிப்பான். அதுவும் கார் ஓட்டும்போது குடித்திருக்கவே மாட்டான்!" என்று திரும்பத் திரும்பச் சொன்னாரே தவிர, யார் மீது குற்றம் சொல்லி என்ன பயன் என்பது அவருக்கும் தெரியவில்லை. அவர் மனைவிக்கும் தெரியவில்லை.

எட்டத்தில் நின்றபடி ஒரு பத்திரிகை நிருபர் அவர்களைப் படம் பிடித்துக் கொண்டிருந்தான். அவனை அடித்து விரட்ட வேண்டும் போலிருந்தது சாப்மனுக்கு. ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார்.

பிலிப்பின் சடலத்தைக் கண்ட போது அவர்களுடைய துக்கம் எல்லை மீறியது. தாங்களும் சவமாகி விட்ட மாதிரி ஒரு நிமிடம் அசைவற்று நின்றார்கள். சாப்மன் கதறி அழுதார். மேரி குனிந்து மகனை முத்தமிட்டாள்.

பதினேழு வருடங்களுக்கு முன், அன்னையாகி விட்ட பூரிப்புடன் அவனைக் கையிலேந்தி மகிழ்ந்தது இப்போதுதான் போலிருந்தது. அந்தக் குழந்தையைத் தன் கையிலிருந்து யாரும் பறிக்கப் போவதில்லை என்று எண்ணியதெல்லாம் எத்தனை பொய்யாகி விட்டது!

இன்னொரு பத்திரிகை நிருபரும் அவர்களைப் படம் எடுத்தார். இப்போது சாப்மன் அவர் மீது கோபப்படவில்லை. தன் கோபம் எல்லாருக்கும் தெரியட்டும் என்றே தீர்மானித்தவராக, "இதை இப்படியே விட மாட்டேன்! ஒரு செனேட்டரின் மனைவியைக் காப்பாற்றுவதற்காக, செனேட்டரின் பெயரையும் பதவியையும் காப்பாற்றுவதற்காக, என் பிள்ளையின் பெயருக்குக் களங்கம் ஏற்படுத்த நான் இடம்கொடுக்கப் போவதில்லை!" என்று சொல்லியபடி மனைவியை அழைத்துக் கொண்டு காருக்குத் திரும்பினார்.

தாரென்ஸனும் பேஜும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பலபலவென்று பொழுது விடிந்து கொண்டிருந்தது. இனிமையான, கதகதப்பான வசந்த காலம். ஆனால் பேஜுக்கு அது வசந்தமாக இருக்கவில்லை. அவள் இருதயத்தில் குளிரும் பனியும் குடிகொண்டிருந்தன.

(தொடரும்)

**"என்ன சார்? அன்னிக்கு உங்க வீட்டுக்கு வந்திருந்தப்ப உங்க மனைவியை அறிமுகப் படுத்தி, அவங்க ஹவுஸ் ஒய்ஃப்னு சொன்னீங்க. இப்ப இந்த ஆபீஸில் வேலை செய்யற பெண்ணை உங்க மனைவின்னு சொல்றீங்க?"**

**"இது ஆபீஸ் ஒய்ஃப்!"**

**— பாஸு**



வைட்டமின் கதை - 12

# சிநேகம்

சீதா ரவி

தம்ளரில் மிகக் கொஞ்சமாய் டிகாக்ஷன் இருந்தது. பொங்கி வழிந்து அடுப்பிலும் மேடையிலும் குளம் கட்டியது போக மீதி பால்.

எரிச்சலுடன் பாலை வேறு பாத்திரத்துக்கு மாற்றிச் சுட வைத்தாள் கல்யாணி. முக்கால் தம்ளருக்கும் குறைவாகவே காப்பி கிடைத்தது.

ஏதோ ஒரு வாரப் பத்திரிகையில் அறிவுரை படித்ததுண்டு. 'உங்கள் கணவன் ஐம்பது சத விகித வீட்டு வேலையைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று கணக்குப் போட்டு எதிர்பார்க் காதீர்கள்...'

மூன்று நாள் பெங்களூரில் சேல்ஸ் பிர மோஷன் செமினார் முடித்து வீடு திரும்பினால் ஒரு முழு தம்ளர் காப்பியை எதிர்பார்க்கலாமா...? - கல்யாணிக்கு அந்த அலுப்பிலும் கேள்வி எழுந்து சிரிப்பூட்டியது. பத்திரிகைகளில் இந்த விதண்டாவாதக் கேள்விக்கெல்லாம் பதில் கிடைக்காது.

கடைசி வாய் காப்பியை விழுங்குகையில் சங்கரன் வேகமாக உள்ளே வந்தான். டென்னிஸ் ராக்கெட்டை சோஃபாவில் போட்டான்.

"கல்யாணி..." ரயில் அழுக்குடன் அவன் வியர்வையும் சேர்ந்தது.

"விடுங்க! மேடையெல்லாம் துடைக்கணும். இப்படியா பாலைப் பொங்க விடறது...?"

"ஸாரி! எனக்குக் காலைல சாப்பாடு வேண் டாம். சீக்கிரம் போகணும். உன் செமினார் என் னாச்சு...? சாயந்தரம் சொல்றியா? சீக்கிரம் வந்துடு..."

குளித்துத் தயாராவதற்குள் போய் விட்டான்.

ஈரத்துணி கொண்டு அடுப்பையும் மேடை யையும் துடைக்க ஆரம்பிக்கவும் போன்...

"என்ன பாலு...?"

"எம்.டி. இன்னிக்கு பாம்பே போறார். அவ சரமா. காலைல ஒன் அவர் முன்னதா உங்களை வரச் சொன்னார். செமினார் விவரமெல்லாம் கேட்கணுமாம்..."

"................"

"மேடம்...?"

"வரேன்..."

அன்புள்ள ஐயா,

மூன்று நாட்களாக நமது அலுவலகப் பணி நிமித்தம் அயலூர் போயிருந்ததால் எனது வீடு அலங்கோலமாய்க் கிடக்கிறது. அதை நேராக் கவும் எனது கணவரின் சுயம்பாக முயற்சிகள் நிகழ்த்தியிருக்கும் சமையலறை விபத்துகளை கவனிக்கவும் ஒருநாள் விடுப்பு தேவைப்படு கிறது...

எந்த அலுவலகத்தில் கொடுப்பார்கள்! அழுக்கு வீடும் அவசர சமையலும் வேலைக்குப் போகும் பெண்களுக்கு விதிக்கப்பட்ட நிரந்தரங் கள்!

"பேசாம ஏதாவது கிளார்க் உத்யோகம் பார்க்கலாம். இப் படி சேல்ஸ், டார்கெட்னு ஏன் உடம்பைக் கெடுத்து நாக்கைப் பிடுங்கிண்டு...?" அம்மா சொல்லும் நேரங்களில் கல்யாணிக்குச் சுருசுரு வென்று கோபம் வந்ததுண்டு. இப்போதெல்லாம் அந்தக் கோபத்தின் வீர்யம் குறைந்து வருகிறது.

மேடையை முழுதும் துடைக்காமலே விட்டுப் போனாள். அலமாரியில் அடுக்கியிருந்த உள்ளாடைகள் தாறுமாறாய்க் கலைந்து கிடந் தன. தேடியெடுத்து புடைவை, அதற்குப் பொருத்தமான ரவிக்கை என்று ஒழுங்குபடுத்திக் கொள்வதற்குள் சங்கரன் குளித்துவிட்டு வந் தான்.

"கல்யாணி! போகும்போது மொபைல் ஐயர்ன்காரன்கிட்டே சொல்லிட்டுப் போய் டறேன். கொஞ்சம் துணியெல்லாம் பார்த்து எண்ணி, கணக்கெழுதிக் கொடுத்துடு."

"எனக்கு டயம் இல்ல சங்கர்... எம்.டி. முன் னால வரச் சொல்லிருக்கார்..."

"ப்ளீஸ்! நாளைக்குப் போட சட்டையில்ல. எட்டரைக்கு நான் தரமணியில இருக்கணும். இல் லைன்னா நானே கணக்கெழுதிக் கொடுத்துட்டுப் போய்டுவேன்..." கெஞ்சல் பார்வையுடன் போய் விட்டான்.

வாட்டம் நோக்கித்தான் தண் ணீர் பாயும். சுமப்பவர்களிடம் தான் பொறுப்புகள் விடப்



படும்.

குளிப்பதற்குள் லாண்டரி பையன் வந்தான். அவசரமாய் வெளிப்பட்டு அவனிடம் துணி தருவதற்குள் போன் அடித்தது.

"சங்கரன் இல்லையா...?"

"கிளம்பிட்டாரே..."

லாண்டரி வேல்முருகன் வாசல் மணியைக் கோபமாய் அழுத்த,

"ஒரு நிமிடம்..." போனைக் கையால் மூடிக் கொண்டு அவனை அதட்டி, காக்கச் சொல்லி விட்டு...

"யார் பேசறதுங்க..."

"தரமணியிலேருந்து..."

"அங்கதான் வரார்..."

"உன் வீட்லயே பத்து நிமிஷம் நின்னா முத வாளிக்கு நான் என்ன பதில் சொல்றதாம்..." வேல் முருகன் சலிப்புடன் துணிகளை வாங்கிப் போனான்.

'என் சலிப்பை யாரிடம் சொல்வது...'

விளக்கேற்றிவிட்டு மணியைப் பார்த்தாள். மீண்டும் ஒரு காப்பி போட்டுக் குடிக்க நேரம் இருந்தது. ஃபில்டரில் கொஞ்சமாய் பொடி அமுக்கி அடுப்பில் வெந்நீர் வைத்தாள். புளி ஊற வைத்தால் இரவு வந்து குழம்பு தயாரிக்கச் சௌ கரியம். உருட்டிய புளியைக் கிண்ணத்தில் போட்டு தவலையிலிருந்து நல்ல தண்ணீர் மொண்டு எடுக்க,

மறுபடி போன்... மொண்டெடுத்த நீரை அப்படியே வைத்துவிட்டுப் போனாள்.

"கல்யாணி!..." சங்கரனின் அத்தை மறு

முனையில்.

"சொல்லுங்க அத்தை..."

"இங்கதானே அடிநிலத்திலே குடியிருக்கே... அத்தையை ஒரு நடை வந்து பார்த்துட்டுப் போக ணும்னு தோணறதா உனக்கு...? ஒண்ணரை மாச மாச்சு உன்னைப் பார்த்து..."

"வரேன் அத்தை..."

"சங்கரன் எங்க? போய்ட்டானா...? ஆமாம் நீ இன்னும் குளிச்சுண்டுதான் இருக்கியா...? சமய புரம் மாரியம்மனுக்கு நேர்ந்துக்கோன்னு சொன் னேனாயில்லியா...?"

'தினப்படி குளிக்கவே நேரமில்லை... அத்தை. இன்னிக்குக் கூட குனிந்து கால் தேய்த்து விரலி டுக்கு சுத்தம் செய்வதற்குள் லாண்டரி பையன் வந்து விட்டான்...'

சொல்வதற்கு அத்தை இடைவெளி தர வில்லை. டாக்டர் கமலா செல்வராஜை பலமாக சிபாரிசு செய்து கொண்டிருந்தாள்.

"அத்தை! அடுப்புல பால் வைச்சிருக்கேன்... அப்புறம் பேசட்டா..." – சந்தோஷமான பொய்.

"முதல்ல ஒரு கார்ட்லெஸ் போன் வாங்கிக் கோடி கல்யாணி..." விடைகொடுத்தாள் அத்தை.

கார்ட்லெஸ் போன்!

சம்பாதிப்பதை அனுபவிக்க எங்கே நேர மிருக்கிறது! இன்னும் பிளாக் அண்ட் ஒயிட் டீவியை மாற்றியபாடில்லை.

"நாம ஒருநாள் சேர்ந்து போய் வாங்கலாம் கல்யாணி..."

அந்த ஒருநாள் எப்போது வரப் போகிறதோ...? அவனுடைய வாடிக்கையாளர்களையும் அவனு டைய அலுவலகத்தின் அசுர விற்பனைக் குறிக் கோளையும் கவனித்தது போக மீறும் பொழுதில் இப்படி சமைக்கவும் சாப்பிடவும் உள்ளாடை களைத் தேடியணியவும், லாண்டரிக் கணக் கெழுதவும், பிள்ளை பெறுவது பற்றி போனில் பிரசங்கம் கேட்கவும்...

'சே! என்ன வாழ்க்கை இது...'

உள்ளே அபரிமித எரிச்சலும் சோர்வும் கலந்த எரிமலை குமுறியதில் ஒரு நொடிப் பொழுது – ஒரேயொரு நொடிப் பொழுது கவனம் பிசகியது. உருட்டிய புளியை வெற்றுணர்வுடன் பிரித்து பரப்பிக் கொண்டே காப்பிக்குக் கொதிக்க வைத்த வெந்நீரால் தன் நீண்ட விரல்களையும் சேர்த்து நனைத்துக் கொண்டாள் கல்யாணி!

**ம**ஞ்சளாக பர்னால் மூடிய வலக்கை விரல் களை அருவருப்புடன் பார்த்தார் எம்.டி.

"என்ன இது...?"

"சர்! ஹாட் வாட்டர்... ஏதோ ஞாபகத்துல கொட்டிக்கிட்டேன்..."

"என்னம்மா பதில் இது.. சின்னக் குழந்தை மாதிரி... கொஞ்சம் பொறுப்பா நடந்துக்க வேண் டாமா...? சரி, சொல்லு..."

பெங்களூர் செமினார் விவரங்கள் சொல்லி முடித்து வெளிவந்தபோது காதுகளில் கேட்டுக் கொண்டேயிருந்தது 'கொஞ்சம் பொறுப்பா நடந்துக்க வேண்டாமா...? பொறுப்பா...'

'எது எது என் பொறுப்பு...? வாங்குகிற சம் பளத்துக்கு உண்மையாய் உழைப்பதும், யாரோ முதல் போட்ட பற்பசை கம்பெனியை என்னு டையது போல் பாவிப்பதும், அதன் விற்பனைக் குறிக்கோள்களை எட்டுவதில் சாகசம் காட்டு வதும் எல்லாமும் என் பொறுப்புதானா...?

திருமதி சங்கரன் என்ற வார்ப்புக்குள் பொருந்து வதும், அவனுக்குச் சமைத்து, துவைத்து, சுத்தம் செய்து, வீடமைத்து, அவன் கொஞ்சிய போது கொஞ்சி, கோபித்தபோது விலகி, மோகித்தபோது அனுசரித்து... இவையும் என் பொறுப்புதானா?'

வெந்நீர் கொட்டிய கை வேறு, பொறுப்பில் லாமல் எரிந்து இம்சித்தது. அரை நாள் விடுப்புச் சொல்லிவிட்டு வீட்டுக்குப் போனாள் கல்யாணி.

**இ**ரவு ஏழரை மணியளவில் எரிச்சல் சற்று அடங்கியது – கையில். இடது கரத்தால் புளி கரைக்க, காய் நறுக்க முடியாது. சங்கரன் இன் னும் வரவில்லை...

'வரட்டும்... ஏதாவது டிஃபன் வாங்கச் சொல்லி சமாளிக்க வேண்டியதுதான்' – கண் மூடி தலை சாய்த்து பாட்டுக் கேட்டாள். வயலி னில் பந்துவராளியின் குழைவு சுயபச்சாதாபத் தைக் கிளர்த்தியது.

போன்...!

கரகரத்துப் போன குரலில் "ஹலோ" என் றாள்.

"ஹாப்பி பர்த்டே!" குரலைக் கேட்டதும் காது குளிர்ந்தது.

"உமா! ஏய்... எங்கே? கலிஃபோர்னியாவி லேருந்தா பேசறே...?"

– கல்லூரி சினேகிதி.

"ஆமாம் ஆமாம். ஆயிரமாயிரம் மைல் களுக்கப்பாலிருந்து... ஹாப்பி பர்த்டே!"

சங்கரனைக் காதலித்த காலத்தில் இரு வருக்குமிடையே தூது போனவள்.

"தாங்க்யூ! உனக்கொண்ணு தெரியுமா...? எனக்கே மறந்து போச்சு என் பர்த்டே...."

கல்யாணியை அவளுக்கே அடையாளம் காட்டி, பணிக்கு அனுப்பி, அவள் படிப்படியாக உயர்ந்ததைப் பார்த்து மகிழ்ந்தவள்.

"எப்படி உனக்கு ஞாபகமிருக்கு உமா...?"

"அப்படித்தான்...!"

"அப்படித்தான்னா...? என்ன அர்த்தம்?"

"அப்படித்தான்னா அப்படித்தான்... இது ஐ.எஸ்.டி. கால் தெரியுமில்லே... மக்கு! நேரத்தை வீணாக்காம பொறுப்பா பேசு... நீ எப்படி இருக்கே...?"

சுயபச்சாதாபம் சரசரவென்று வடிந்து போயிருந்தது.

"Top of the World" என்றாள் கல்யாணி. சந்தோஷமான நிஜம்.

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளை யல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 1000/-

25 தங்க லாக்கட்கள் 1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 250/-

UJALA
FOR
SUPERWHITENESS OF
CLOTHES

UJALA
FOR
SUPERWHITENESS OF

**உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்**

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்



Write to : **Jyothy Laboratories (UJALA)**, 2- A. Singarayar Mansion, Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.

# ஒரு 'காட்டமான' காதல்!

### காஸ்ட்லி மஹா(ராஷ்ர) பிள்ளை

ஐ.எஸ்.ஐ., காஷ்மீர் பயங்கரவாதிகள், எல்.டி.டி.ஈ., காலிஸ்தான் கமாண்டோ ஃபோர்ஸ், ஹிஜ்புல் முஜாஹுதீன், மும்பை அண்டர்வர்ல்ட்... இப்படி அக்கம் பக்கத்திலுள்ள எந்த தீவிரவாத இயக்கத்தின் 'ஹிட் லிஸ்டை'ப் பார்த்தாலும், அதில் தவறாமல் இடம்பெற்றிருக்கும் ஒரு பெயர் பால்தாக்கரே! (கின்னஸ் இல்லாவிட்டாலும், அட்லீஸ்ட் லிம்கா ரெக்கார்டு?) 3 அஸிஸ்டெண்ட் கமிஷனர்கள், 6 கான்ஸ்டபிள் ட்ரைவர்கள், 6 வயர்லெஸ் ஆபரேட்டர்கள், 3 மோப்ப நாய்கள், 3 மாருதி ஜிப்ஸிகள், 3 வாக்கிடாக்கி, ஒரு எக்ஸ்ரே மிஷின், 3 வயர்லெஸ் செட்டுகள், ஒரு வெடி மருந்து டிடெக்டர் - அடுத்த பிப்ரவரி வரையில் தாக்கரேவுக்கு அளிக்கப்பட்டிருக்கும் இந்த கூடுதல் பாதுகாப்புக்கு ஆகும் மேம்போக்கான செலவு, 26.8 லட்சங்கள்!

### எப்போ வருவாரோ?

முகத்தில் முக்காடிடாத குறையாக பவார் ஆதரவாளர்கள் முடங்கிக் கிடக்கிறார்கள் பாவம்! காங்கிரஸ் பிரசிடெண்ட் தேர்தலில் பெரிய, வரலாறு காணாத வெற்றியை ஒன்றும் எதிர்பார்க்கவில்லைதான்; ஆனால் இப்படி ஒரு நெத்தியடியா? 7557 வோட்டுகளில், பவாருக்குக் கிடைத்தது 882தான்! கேசரிக்கு 82.5% என்றால், 'இவருக்கு 11.7%. இந்த சோகம்தான் பவார் "காம்ப்"பை இருளடைய வைத்திருக்கிறது! இவர் எந்தக் காலத்தில் தேசியத் தலைவராக உருவாகி, எந்த ஜன்மத்தில் பி.எம். நாற்காலியில் உட்காருவதாம்?

### தேடாமலே வந்தது

வெற்றி என்பது தேடிப் போனால் ஓடிப் போகும்; ஓடிப் போனால் தேடி வரும் என்பது முரளி தேவ்ரா விஷயத்தில் 'சரி'யாகி விட்டது! BMC தேர்தல்களில் காங்கிரஸின் படுதோல்விக்கு தார்மீகப் பொறுப்பேற்று, 17 வருடங்களாகத் தாம் வகித்துக் கொண்டிருந்த MRCC (மும்பை ரீஜனல் காங்கிரஸ் கமிட்டி) பிரசிடெண்ட் பதவியைத் தூக்கி எறிந்துவிட்டார் தேவ்ரா! இம்முறை கூட, இப் பதவிக்கு இவர் போட்டியிடுவதாகவே இல்லையாம்! தேர்தலுக்கு மூன்று நாட்கள் முன்பு வரை, குடும்பத்துடன் வெளிநாட்டுச் சுற்றுப் பயணங்களில் ஈடுபட்டிருந்தவர், திடீரென்று எந்தவித எதிர்ப்புமேயின்றி, முழுமனதாகத் தேர்வு செய்யப்பட்டு விட்டார். ஒவ்வொரு ஞாயிறும், ஒவ்வொரு 'வார்டை' விசிட் செய்து, அங்குள்ள மக் களின் பிரச்னைகளைத் தீர்க்க ஆவன செய்யப் போகிறா



• சரத்பவார்

ராம்! ஹூம்... எப்படியாவது காங்கிரசை மீண்டும் நிமிர்த்தும் பிரயத்தனம்தான்! அப்படியாவது பொதுமக்களுக்கு நன்மை விளைந்தால் சரி!

### சோமையா சொல்வது மெய்யா?

நிதி நிறுவன ஊழல்கள் என்றாலே கொட்டாவி விட்டுக் கொண்டிருந்த "Economic Offences Wing" போலீசார், CRB ஸ்காமில் மட்டும் சுறுசுறுவென்று, ஹாங்காங்கிலிருந்த பன்சாலியை குடும்பத்துடன் மும்பைக்கு அழைத்து வந்து கோர்ட்டில் நிறுத்திய மர்மம் என்ன? எல்லாம் மும்பை பி.ஜெ.பி. பிரசிடெண்ட் கிரீட் சோமையாவும், துணை முதல்வர் கோபிநாத் முண்டேவும் முடுக்கிய முடுக்கால்தான்! ஏமாந்த பொதுஜனத்தின் மீது எக்கச்சக்க அக்கறை போல் இவர்கள் காட்டிக் கொண்டாலும், பி.ஜெ.பி.யின் அடிமட்டத் தொண்டரிலிருந்து மேல் மட்டத் தலைவர் வரை எல்லார்

பணமும் – கிட்டத்தட்ட 200 கோடிகள் CRBயில் முடங்கிக் கிடப்பதுதான் உண்மை! பி.ஜெ.பி.யின் "மஹா ஆதி சேஷனு"க்கென்று, பன்சாலி ஒரு கோடி செலவழித்த



• சஞ்சய் தத்

தையும், ஒரே மேடையில் பன்சாலி, கிரீட்சோமையா, அத்வானி அனைவரும் சேர்ந்தமர்ந்து சிரித்த புகைப்படம் செய்தித்தாள்களில் பிரசுரமானதையும் மக்கள் நினைவில் வைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அதை நினைவுபடுத்தினால், "சேஷன் கூடத்தான் பன்சாலியுடன் ஃபோட்டோ எடுத்துக் கொண்டிருக்கிறார்" என்கிறார் சோமையா! "எங்களுக்கும் CR பன்சாலிக்கும் தொடர்பேயில்லை" என்று ஒரே போடாகப் போட்டு விட்டார்!

## புதிய தி(ண்டா)ட்டம்!

மும்பையில் பல இடங்களில், பள்ளிகள் திறந்த அன்றே, இரண்டாவது வகுப்பு மாணவர்களுக்கு, இரண்டு வார லீவு அறிவித்து விட்டார்கள்! இனி வருடாந்திரப் பரீட்சைகள் கிடையாது என்பதால், இந்தக் குழந்தைகளுக்கு "வாராந்திர அஸெஸ்மெண்ட்" அடிப்படையில்தான் கிரேடுகள் நிர்ணயிக்கப்படும். இந்தப் புதிய திட்டத்துக்கான பயிற்சி பெற வேண்டியவர்கள் 13000 டீச்சர்கள்; பெற்றிருப்பவர் 2200 மட்டுமே! மற்ற டீச்சர்கள் 'படிக்கும்' வரை, குழந்தைகளுக்கு ஜாலிதான்! புதிய திட்டம் எதையாவது அமலாக்குவதென்றால், அங்கே குழப்பம் தலைவிரித்தாட வேண்டுமென்பது நமது தேசிய பாரம்பரியமாயிற்றே?

## 'தத்'துப் 'பித்து'

உலகெங்கிலும் சினிமாப் பைத்தியங்கள் உண்டுதான்! ஆனால் நோபல் பரிசு மும்பைக்குத்தான் கிடைக்கும் போலிருக்கிறது! பரிசுக்குரியவர் 49 வயதான திருமதி அர்மாய்தி காயஸிபூர். புனை பெயர் திருமதி சஞ்சய் தத்! சஞ்சய் தத் மீது "ஹீரோ-வர்ஷிப்" முற்றி, காதலாகிக் கசிந்துருகி, மானசீகத் திருமணத்தில் முடிந்து, பெற்ற பிள்ளையிடமே, "ஸஞ்சய் தத் தான் உனக்கு ஸ்டெப்ஃபாதர்" என்றும், பேரன் பேத்திகளிடம், சஞ்சயை நீங்கள் தாத்தா என்றுதான் அழைக்க வேண்டும்" என்றும் பிதற்ற வைத்து, கணவனை வீட்டை விட்டே விரட்டி விட்டது! சஞ்சயின் பெரிய பெரிய போஸ்டர்களை வீட்டில் ஒட்டி வைத்து, அவர் பிறந்த நாளன்று அதற்குத் திலகமிட்டு, மாலை போட்டு, நைவேத்தியம் காட்டுவது, அவர் படங்கள் டீ.வி.யில் வந்தாலோ தியேட்டரில் வந்தாலோ, ஊரே செவிடாகும் வண்ணம் ஊளையிடுவது, அவருக்கு ஜோடியாக நடித்த மாதுரியை ஏசுவது, ஜோடியான ரியா பிள்ளைக்கு சாபம் தருவது... இன்னபிற 'லூஸ்'தனங்களை அடுக்கிக் கொண்டே போகலாம். "அவர் அப்பா, தன்னை விட 12 வயது மூத்த நர்கிஸை மணந்து கொள்ளவில்லையா? அதே போல் 37 வயது சஞ்சையும், 12 வயது அதிகமான என்னை மணக்கக் கூடாதா?" என்று வாதாடும் இந்தப் பார்ஸிக்காரப் பெண்மணியின் ஒரே லட்சியம், ஒருமுறையாவது தன் கையால், சஞ்சய்தத்துக்கு உணவு ஊட்ட வேண்டுமென்பதுதான்! தேவுடா!

- ஜெயஸ்ரீ ராஜ்



வமிருந்து தெரிந்து கொண்டு வந்த 'உண்மை'யைச் சொன்னார் ப்ருகு மஹரிஷி.

"அன்னம்தான் பிரும்மம்... பிரசாதமே பருப்ரும்மம்..." என்றார் தந்தை வருணனிடம்.

"பிரசாதம் இல்லாவிட்டால் அடியேன் இப்படி வந்து பேச முடியுமா? பேச வேண்டுமானால் அன்னம் (உணவு) உள்ளுக்குள்ளே போகணுமா வேண்டாமா...?"

வேதத்திலே, இன்னொரு இடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது - 'சொல்லித் தராமல் வரக்கூடிய ஒரே வித்தை சாப்பிடுவதுதான்! ஒருத்தர் எடுத்துச் சொல்லாமலே தானாகச் சாப்பிட வேண்டும் என்று நமக்குத் தோன்றுகிறதே! மற்றொரு இடத்திலே வேதம் சொல்கிறது - மனிதனுக்கு சத்ரு யாரென்றால் பசி!

'வயிற்றில் பசி என்கிறதே ... அது பரம வைரி, பரம விரோதி! என்கிறது வேதம்!

கீதையில் பரமாத்மா சொல்கிறான் - 'ஒவ்வொருத்தர் உள்ளேயும் அக்னியாய் இருந்து தகிக்கிறேன்...' என்கிறான்.

அன்னத்தை உள்ளே போட்டாலொழிய தகிப்பு அடங்காது!

சாந்தோக்ய உபநிஷத்தில் ஒரு கதை. சிஷ்யரை அருகில் அழைத்து உட்கார வைத்துக் கொண்டு குருவானவர் பாடம் சொல்கிறார். தேய்பிறை காலம் அது.. பிரதமையிலிருந்து அமாவாசை வரைக்கும் ஒவ்வொரு நாளாக அவனுக்குத் தருகிற பிரசாதத்தின் (உணவின்) அளவைக் குறைத்துக் கொண்டே வருகிறார். அமாவாசை அன்று சாப்பிட ஒன்றும் கிடையாது. பட்டினி போட்டு விட்டார் சிஷ்யனை.

அன்றைக்கு உட்கார வைத்து 'வேதத்தைச் சொல்லு...' என்றால்...? ஒரு அக்ஷரம்கூட ஓட வில்லை அவனுக்கு! அவ்வளவும் மனப்பாடம் செய்தவன் மௌனமாய் சோர்ந்திருக்கிறான்.

மறுபடியும் என்ன பண்ணினார்... வளர்பிறையில் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரசாதத்தை அவனுக்குப் போட்டுக் கொண்டே வந்தார். பௌர்ணமி அன்று பூரணமாய் உணவு அளித்ததும் கிடுகிடுவென்று வேதத்தைச் சொல்கிறான் அவன்!

இப்போது யோசியுங்கள்... சொல்வதற்கும், பேசுவதற்கும் அனுஷ்டானம் பண்ணுவதற்கும் மூலம் எது...? அன்னம்தான் மூலம் என்று ஆகிறது.

அதனால் ப்ருகு மஹரிஷி சொன்னார். "உலகத்தையே ஆட்டிப் படைக்கும் அன்னம் தான் பரப்ரும்மம்.... அதை நான் தெரிந்து கொண்டு வந்திருக்கிறேன்..."

வருணன் பார்த்தார்... அதை சரி என்றும சொல்லவில்லை; தப்பு என்றும் சொல்லவில்லை. 'மறுபடியும் போய் தபஸ் பண்ணு' என்று ப்ருகு மஹரிஷியைத் திருப்பியனுப்பி விட்டார்.

மறுபடியும் போய் தவமிருந்தார் ப்ருகு. திரும்ப வந்தார்.

"என்ன தெரிந்து கொண்டாய்...?"

"பிராணன்தான் பரப்ரும்மம். பிராணன் இல்லாவிட்டால் எதுவுமே செயலற்றுப் போகும் என்பதனாலே பிராணன்தான் பரப்ரும்மம் என்று தெரிந்து கொண்டேன்..."

தைத்ரியோ உபநிஷத்தில் வருகிற இந்த வாக்கியத்துக்கு சாந்தோக்ய உபநிஷத்தில் விளக்கம் இருக்கிறது. அந்தக் கதை நான் ஏற்கெனவே சொன்னதுதான் - உங்களுக்கு நினைவிருக்கும். ஒருமுறை காதுக்கும் கண்ணுக்கும் 'நான்தான் பெரியவன்' என்று சண்டை வர, பிரும்மாவிடம் போயின. 'இருவரும் கொஞ்ச காலம் பிராணனை விட்டுப் பிரிந்திருங்கள். யார் பெரியவர் என்பது தெரிந்து போகும்' என்றார் பிரும்மா. அதேபோல் அவை செய்ய, பார்வையும் செவிப் புலனும் இல்லாமல் கொஞ்சம் காலம் நிம்மதியாய்

12 குறையொன்று!

முக்கூர் லக்ஷ்மிநரசி

இருந்தாலும் அந்த உறுப்புகளுக்குரிய மனிதர் ஒருநாள், பிராணனானது அம்மனிதனின் உடலைவிட்டு வெளியே கிளம்பிப் போய் விட்டதாம். அப்போது என்ன ஆயிற்று...? காதும் கண்ணும் உபயோக மற்றுப் போயின!



அப்போதுதான் அவனுக்குத் தெரிந்ததாம்... யார் பெரியவன் என்பது... எல்லாம் பிராணனை விழுந்து சேவிக்க ஆரம்பித்த தாம்!

ஆக, பிராணன்தான் பரப்ரும்மம் என்கிறார் ப்ருகு மஹரிஷி.

வருணன் அதைச் 'சரி' என்றும் சொல்லவில்லை, தப்பு என்றும் சொல்லவில்லை. "திரும்பிப் போய் தபஸ் பண்ணு..." என்று அனுப்பி வைத்து விட்டார்!

திரும்பிப் போனவர் மீண்டும் வந்தார்.

"பிராணன் இல்லை... மனஸ்தான் பரப்ரும்மம். ஏனென்றால் மனம் தான் இந்த்ரியங்களுடைய பரி வர்த்தனைக்குக் கார ணம்" என்றார்.



# ில்லை

ம்மாச்சார்யார்



மனத்தினுடைய தொடர்பு இல்லையென்று வைத்துக் கொள்வோம்... அப்போது நமக்கு ஒன்றுமே தெரியாது அல்லவா...! ஆகையினாலே எல்லாமே மனத்தில்தான் போய் ஒடுங்குகிறது.

மனஸ்ஸின் சம்பந்தமில்லாமல் இந்த்ரியங்கள் வேறுபட்டுப் போய்விட்டதானால் நமக்கு எந்தவிதமான பய- பீதி இத்யாதிகளும் ஏற்படுவதில்லை.

ஒருத்தர் விடியற்காலை எழுந்திருக்கிறார். தலையணையை எடுத்து வைத்தால் அதனடியில் நான்கைந்து பாம்புக் குட்டிகள்! நடு நடுங்கிப் போனார் அவர் அதைப் பார்த்ததும்! இரவு மொத்தமும் அவை அங்கேதான் இருந்திருக்கின்றன. அவர் தம் கையைத் தலையணைக்கடியில்கூட வைத்துக் கொண்டு தூங்கியிருக்கக் கூடும். ஆனால் அப்போது ஏதாவது பயம் தோன்றியதோ...? இல்லவே இல்லையே! மனசின் சம்யோகம் ஏற்படாததாலே அப்போது பயம் ஏற்படவில்லை.

ஆஞ்சநேயர் சீதாதேவியைத் தேடிப் போகிறார்; எல்லா ராக்ஷஸ ஸ்த்ரீகளும் படுத்துறங்கும் நேரம் சீதையிருக்கிறாளா என்று பார்க்கிறார். அப்புறம் 'இதர ஸ்திரீகள் படுத்துறங்கும்போது இப்படி எட்டி எட்டிப் பார்த்தோமே... அது தப்பில்லையா...' என்று அவருக்குச் சந்தேகம் வந்து விட்டது. தன்னையே அக்கேள்வியைக் கேட்டுக் கொண்டார். தப்பில்லை என்று தானே முடிவு பண்ணிக் கொண்டார்.

மனசினாலே பார்த்தால் அல்லவா விகாரம். மனசினால் பார்க்கவில்லை. அதனால் தோஷம் இல்லை என்று முடிவுக்கு வந்தார்.

மனத்தின் சம்யோகத்தினால்தான் பாவ புண்ணியாதிகள் ஏற்படுகின்றன. இந்த சம்சார பந்தத்திலே நம்மைப் பிடித்துத் தள்ளுவதற்கும் சரி, மோக்ஷத்தை வாங்கிக் கொடுப்பதற்கும் சரி... மனமே காரணம்.

ஒருத்தருக்கு எதிரே அண்டா புளியோதரை வைத்திருக்கிறது. இன்னொரு கங்காயத்தில் தளும்பத் தளும்பத் தயிர் சாதம்; மற்றொன்றில் நிறைய சர்க்கரைப் பொங்கல்... கடச்கட...!

எதிரே இத்தனை அன்னம். பிராணன் உடலுக்குள்தான் இருக்கிறது. ஆனால் மனம் சரியில்லை... ரொம்ப சிரமத்தில் இருக்கிறது... வியாகூலத்தில் இருக்கிறார் அவர். அதனால் கொஞ்சம் சித்த பிரமை... என்ன பண்ணுகிறார்...

கொஞ்சம் தயிர் சாதத்தை எடுத்து வாரி சுவரில் பூசுகிறார்! சர்க்கரைப் பொங்கலை எடுத்துப் பக்கத்தில் இருக்கிறவர் தலையில் தடவுகிறார்...!

அவரோடு இருப்பவர்கள் என்ன சொல்கிறார்கள்...? "மன்னித்துக் கொள்ளுங்கள்...

# அமெரிக்கா சென்ற அன்னை!



முதல் முறையாக இந்தியாவிலிருந்து அன்னை வேளாங்கன்னி அமெரிக்கா சென்றிருக்கிறாள்!

உலகின் மிகப் பெரிய மாதா கோயில்களுள் ஒன்று வாஷிங்டனில் உள்ள நேஷனல் ஷ்ரைன் பஸிலிகா.

இங்கு இந்திய பாணி வேளாங்கன்னியை வடிவமைத்திருப்பவர் ஒரு இத்தாலிய சிற்பி.

வாஷிங்டனில் உள்ள இந்திய கத்தோலிக்க சங்கம் இதனை நிறுவியுள்ளது.

சென்னை, தி.நகரில் உள்ள பிரின்ஸ் ஜுவல்லரி வேளாங்கன்னியின் ஆபரணங்களை (கிரீடம், செங்கோல்) வடிவமைத்துத் தயாரித்துள்ளது.

---

அவருக்குக் கொஞ்சம் மனசு சரியில்லை..."

ஆக, பிராணன் இருக்கிறது, அன்னம் இருக்கிறது... ஆனால் மனம் சரியில்லாததால் அதை எடுத்தாள முடியவில்லை... ஒருத்தனை ஆட்டிப் படைப்பது அவனுடைய மனசானதினாலே, மனம்தான் பரப்ருஹ்மம் என்றார் ப்ருகு மஹரிஷி.

"போ! மறுபடியும் போ தபஸுக்கு..." என்று அனுப்பி விட்டார் வருணன்!

ஆக, மனமானது பரப்ருஹ்மமில்லை என்று தெரிந்து கொண்டவர், திரும்பவும் போனார்.

கொஞ்சம் காலம் தவமிருந்து திரும்பியவர்,

"விஞ்ஞானம்தான் பரப்ருஹ்மம்" என்றார். "விஞ்ஞான யுகத்தில் நாம் இருக்கிறோம். புதுப்புது கண்டுபிடிப்புகள் எத்தனையோ பார்க்கிறோம். அந்த விஞ்ஞானமும் அதைக் காட்டிலும் உயர்ந்ததையும் இங்கே சொல்கிறார் ப்ருகு முனிவர் - பகுத்தறியும்படியான அந்த அறிவைச் சொல்கிறார். இது நல்லது; இது கெட்டது என்று பகுத்தறியும்படியான ஞான விசேஷம். நமக்கு பகவான் பகுத்தறிவைக் கொடுத்திருக்கிறான். இதர ஜந்துக்களுக்கு அது கிடையாது. விஞ்ஞானத்தைக் கொடுத்திருக்கிறான்... அதனால்தான் ஒரு மனிதன் பெருமை அடைய முடிகிறது - நல்லது - கெட்டது அவனுக்குத் தெரிவதால்தான், நல்லதைப் பிடித்துக் கொண்டு கெட்டதை விடுகிறான்.

அதனாலே, 'விஞ்ஞானம்தான் பரப்ருஹ்மம்' என்றார் ப்ருகு...

இதைக் கூர்ந்து பார்க்க வேண்டும் நாம்... நல்லது தெரிகிறது. கெட்டது தெரிகிறது. ஆனால் கெட்டதை விட்டு விட்டு நல்லதை மட்டும் பிடித்துக் கொள்வதென்பது மஹான்களால்தான் முடிகிறது. சாமான்யர்களால் முடிகிறதா...?

நல்ல மழைக்காலம்.... வீதியிலே மழை ஜலம் ஓடுகிறது. மழை நின்றது. அங்கங்கே குட்டை குட்டையாகத் தண்ணீர் தேங்கி நிற்கிறது. எல்லோரும் மிதித்து மிதித்து எங்கும் சேறு சகதி. ஒருத்தர் அந்தத் தெருவிலே நுழைகிறார். திட்டாகப் பத்தடிக்கு ஜலம்! என்ன பண்ணலாம்! ஆஞ்சநேயனை மனத்திலே நினைத்துக் கொண்டார். அவன் நூறு யோஜனை தூரம் தாண்டினான் அல்லவா... அவனை நினைத்துக் கொண்டு பத்தடி தாண்டிவிடலாம் என்று எண்ணி...

தண்ணீரில் கால் வைத்தால் வஸ்திரம் பாழாகிவிடும்; சேறாகி விடும். ரொம்ப பிரயாசைப்பட்டு தாண்டுகிற வேகத்தில், ஜலத்திலே விழுந்து தலையோடு கால் நனைந்து சேற்றைப் பூசிக் கொண்டு விட்டார். ஒரே சேறும் சகதியுமாய் எழுந்து நிற்கிறார்!

நல்லதும் தெரிகிறது. கெட்டதும் தெரிகிறது. ஆனால் முயற்சி செய்தாலும் நல்லதைக் கைக்கொண்டு கெட்டதை விட முடியவில்லை!

மறுபடி மறுபடி நாம் சேற்றில் போய்த் தானே விழுகிறோம்... பிரயத்தனம் என்னவோ பலமாகத்தான் இருக்கிறது.... ஆனால் பலன்!...?

அதனால்தான் ஆழ்வார் சொல்கிறார் - "நல்லது எதுவோ, கெட்டது எதுவோ எனக்குத் தெரியாது! நான் தெரிந்தவன் மாதிரி காண்பித்துக் கொள்ள மாட்டேன். உனக்கு எல்லாம் தெரியும். எனக்கு நல்லது எதுவோ அதை நீயே அளித்து விடு..." என்று அவன் பொறுப்பிலே விட்டு விடுகிறார்!

பகவான் பார்க்கிறான்... 'அடடா! இவ்வளவு ஞானமிருந்தும் இவர் இப்படிப் பேசுகிறாரே... இவரல்லவா உயர்ந்த அதிகாரி! இவரை நல்ல வழியில் அழைத்துப் போக வேண்டும் என்று அழைத்துக் போகிறார்.

"நல்லது தீயதைப் பகுத்தறியும்படியான ஞானம் இருக்கிறதே... அதனால்தான் ஒருவன் முன்னேற முடியும். அந்த விஞ்ஞானம்தான் ஒருத்தரை ஆட்டிப் படைக்கிறது. அதனாலே விஞ்ஞானம்தான் பரம்ருஹ்மம் - அதை நன்றாகத் தெரிந்து கொண்டேன்" என்றார் ப்ருகு முனிவர்.

"மறுபடியும் போ! போய் தபஸ் பண்ணு..." என்று அனுப்பி விட்டார் வருணன்!

(தொடரும்)

"என்னப்பா... புது மாப்ளே.. வீட்டுக்குக் கிளம்பலையா...?" யதார்த்தமாகக் கேட்கப்பட்ட கேள்விதான் என்றாலும் 'சுருக்' என்று மனதைத் தைத்தது.

பதில் சொல்லலாமா வேண்டாமா என்ற யோசனையில் ராமனாதன்.

"என்னப்பா... பதில் சொல்ல மாட்ட..." விட மாட்டார்கள் என்று தோன்றியது.

"இதோ கிளம்பணும்... வொய்ஃப் வர லேட்டாகும். அதான்..." சாதுர்யமாய்ப் பேசி விட்டதாய் நினைத்தது தப்பாகி விட்டது.

"ஓ.. அங்கேயும் அதே கதை தானா... லேட் மேரேஜ்னா என்னப்பா தப்பு... வீணான வெட்கம் தேவையில்லைப்பா.." இது குடும்ப வாழ்க்கையில் முப்பது வருட அனுபவம் போட்ட ராகவனின் வியாக்யானம்.

ராமனாதன் பதில் சொல்லாமல் அலுவலகம் விட்டு வெளியில் வந்தார்.

பஸ் ரெடியாக நின்றிருந்தது.

ஓரத்து சீட் வாகாய் கிடைக்க, அமர்ந்தார்.

சீதா தன்னை எதிர்பார்த்து,



# திருமாமகள்

தயாராய் வாசலில் காத்திருப்பாளா? அல்லது அவளுக்குள்ளும் தயக்கம் இருக்குமா? தயாராய் தலை சீவி, பூ வைத்து, புதுப் புடைவையுடன், மனதில் படபடப்புடன் வாசலில் நிற்க என்ன இருபது வயதிலா திருமணம் ஆகிவிட்டது?

ராமனாதனுக்குச் சிரிப்பு பீறிட்டது. தன்னையும் அறியாமல் 'க்ளுக்'கென்று சிரித்து விட, முன் சீட்டில் அமர்ந்திருந்த ஜோடி திரும்பிப் பார்த்தது.

கழுத்தில் தாட்டியாய் மஞ்சள் கயிறு. தன்னைப் போல் புதிதாய் கல்யாணம் ஆகியிருக்க வேண்டும். ஆனால் ஒரே வித்தியாசம் வயசு. அவர்கள் இருவர் முகமும் வெட்கத்தில் குங்குமமாய்ச் சிவந்திருந்தது.

திருமணத்தன்று மாலை மாற்றியபோது யாரோ வேகமாய் சீதாவைத் பின்பக்கம் இழுக்க, ராமனாதனுக்குக் கோபம் வந்தது. சீதாவைப் பார்க்க, அவள் கண்களிலும் கஷ்டமும் தயக்கமும்.

"பெண்ணை... மாமா... தூக்குங்கோ... தாய் மாமன் யாரு..."

"பையனோட மாமா... தாய்மாமன்..."

வேண்டாம் என்று ராமனாதன் சொல்வதற்குள் மாமாவின் கைப்பிடியில் திடீரென உயர, அதே போல சீதாவும் உயர்ந்தாள். நாற்பத்தைந்து வயதுப் 'பையனை'யும் முப்பத்தேழு வயதுப் 'பெண்ணை'யும் அவரவர் மாமாக்கள் தூக்குவதை தெரு வேடிக்கை பார்த்து வெறுப்பேற்றியது.

தாலிகட்டியபோது சீதாவைப் பார்க்க அவள் சம்பிரதாயமாய் தலைகுனிந்து கொண்டது நினைவில் எட்டியது.

பஸ் ஸ்டாப் வர, இறங்கினார் ராமனாதன்.

வாசலில் பூட்டு தொங்க, மாற்று சாவியைப் போட்டுத் திறந்தார்.

காலையில் போட்டது போட்டபடி அப்

# பார்வைகள்

படியே கிடக்க, திருமண வாழ்க்கைக்கும், அதற்கு முந்தைய வாழ்க்கைக்கும் அவ்வளவு வித்தியாசம் தெரியவில்லை.

ஃப்ரிட்ஜைத் திறந்து பால் பாக்கெட்டை எடுத்துப் பிரித்தார்.

திருமணத்திற்கு வந்திருந்த பரிசுப் பொருட்கள் அங்கங்கே பிரித்தும், பிரிக்காமலும்.

இந்த நாற்பத்தைந்து வயதிற்கு இதெல்லாம் தேவையா என்று தோன்றியது.

அடுப்பைப் பற்றவைத்து தண்ணீரை வைத்த வேளையில் அழைப்பு மணி.

கதவைத் திறந்தபோது அயர்வாய் சீதா.

"என்னாச்சு சீதா?" பதற்றமின்றி சாதாரணமாய்த்தான் கேட்க முடிந்தது.

'ஒரே வாமிட்டிங்... தலைவலி... டெம்பரேச்சர் இருக்கும்னு நினைக்கறேன்... டீ போட்டு கொண்டு வரட்டுமா...'' என்றதில் சம்பிரதாயம்தான் தெரிந்தது.

''வேண்டாம்... நானே போட்டுக் கொண்டு வரேன்...'' ராமனாதன் சொன்னதும் சீதா எதுவும் சொல்லாமல் படுத்துக் கொண்டாள்.

கொஞ்ச நேரத்தில் ஜுரம் எகிறிக் கொண்டிருந்தது. கண்கள் நிலைகொள்ளாமல் தவித்தது.

"சீதா... இறங்கிப்படும்மா.. யுடிகோலன்ல ஈரத்துணி நனைச்சு நெத்தில போடட்டுமா..." கேள்வியே அபத்தமாக இருப்பது போலப்பட்டது ராமநாதனுக்கு.

சீதா எதுவும் பேசாமல் கண்களை மூடிய படி படுத்திருந்தாள்.

நெற்றியில் பதமாய் ஈரத்துணியைப் போட்டு காயக்காய தண்ணீரை ஊற்ற, ஜுரம் சற்றே இறங்கியது.

அடுத்து எதுவும் கேட்காமல் அம்மா சொல்லிக் கொடுத்த மிளகுக் கஷாயம் பத்தே நிமிஷத்தில் பாத்திரத்தில் ரெடியாய்.

"என்னங்க... கஷ்டம் குடுத்தேனா..." என்ற மனைவியின் வார்த்தைகளில் மனது நெகிழ்ந்தது.

"சே... சே.. அதெல்லாம் இல்லை..." கைத் தாங்கலாய் நகர்த்தி வாகாய் தலையணையை வைத்து, மருந்தைக் கொடுத்தபோது மனைவியின் கண்களில் கண்ணீரைப் பார்க்க முடிந்தது.

**"எ**ன்னப்பா... புதுக்கல்யாணம்னு லீவு மேல லீவா..." நண்பர்களின் ஃபோன் காலுக்கு மௌனமே பதில்.

எல்லாம் பழகி விட்டிருந்தது. காலையில் எழுந்து பால் பாக்கெட் வாங்குவதிலிருந்து, சமைத்து, மருந்து கொடுத்து, பாத்திரங்களை ஒழித்து வேலைக்காரிக்குப் போட்டுவிட்டு, இரவு மனைவிக்கு டானிக் கொடுப்பது முடிய.

இப்போது தெம்பாய் நடக்க ஆரம்பித்து விட்டாள் சீதா.

**"எ**ன்னங்க.. நான் நாளைக்கு ஆபீஸ் போலாம்னு இருக்கேன்..." ஆப்பிளை நறுக்கிக் கொண்டிருந்த ராமனாதன் மனைவியைப் பார்க்க, கத்தி சரக்கென்று கட்டை விரலைப் பதம்பார்க்க, ரத்தக்கோடு சிவப்பாய்ப் பரவியது.

"த்சொ... என்னப்பா இது..." கணவனின் கையைப் பிடித்து நேரே பைப்பில் காண்பிக்க சற்று நேரத்தில் ரத்தம் அலுத்து ஓய்ந்தது.

"கட்டு போட்டு விடறேன்... நீங்க என்ட்ட குடுங்க.. செஞ்ச வேலையே போதும்..." மனைவியின் வார்த்தைகளில் வாத்ஸல்யம்.

''கை எரியும்... பேசாம... கையை நீட்டுங்க... இல்லை ஸ்பூனால.. நானே குடுத்துடறேன்.''

''தேங்க்ஸ்... நோ தேங்க்ஸ்...'' ஒருவரையொருவர் புரிந்து கொண்டது போல் இருந்தது.

வயதுக்கு அப்பாற்பட்டு ஏதோ ஒரு அன்னியோன்யம் புரிந்தது.

"என்னங்க... சாயந்திரம்... உங்களுக்கு... எனி ப்ரோக்ராம்...''

"இருக்கு... சரியாக நாலரைக்கு வருவேன்... ரெடியா இரு... முதல்ல கோவில்... அப்புறம் ஏதானும் ஒரு ரெஸ்டாரெண்ட்..."

பில்லியனில் சீதா தொத்திக் கொள்ள ராமனாதனுக்கு மனது சந்தோஷமாய் இருந்தது.

**"நா**லரைக்கு கிளம்பிடுவேன்... ராகவன்... என் மனைவி காத்திருப்பா..."

மற்றவர்களின் பார்வை இப்போது ஒரு பொருட்டாய்த் தெரியவில்லை ராமனாதனுக்கு.

# வி.கே. ராமசாமி



இருக்கிற இடம் தெரியாமல் இருந்த நடிகர் சங்கம், இன்று தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் பேசப்படுகிற விஷயமாகி விட்டது. நல்ல முறையில் அதன் பெயரும் புகழும் பரவினால் என்னைப் போல சந்தோஷப்படுகிறவர் வேறு யாரும் இருக்க முடியாது. ஆனால், பூசலும் புகைச்சலுமாக விஷயம் பூதாகாரமாகி, பாரம்பரியம்மிக்க ஒரு மாபெரும் அமைப்பு இப்படி கேலிக்குரியதாகிவிட்டதே என்று எனக்குள் பீறிடுகிற துக்கம் இவ்வளவு அவ்வளவு அல்ல.

# ஏன் மாறினார் எம்.ஜி.ஆர்?

. காரணம், நடிகர் சங்கம் தோன்றிய நாளிலிருந்தே அதன் வளர்ச்சியில் உள்ளார்ந்த அக்கறையுடன் ஈடுபட்டு, பாடுபட்டு, கட்டிக் காத்து வளர்த்த சிலருள் நானும் ஒருவன்.

1952-ம் வருடம், மறைந்த இயக்குநர் கே. சுப்ரமணியம், நடிகர்களுக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்று நடிகர் சங்கத்துக்குப் பிள்ளையார் சுழி போட்டபோது (அப்போது இதன் பெயர் 'துணை நடிகர்கள் சங்கம்'.) திக்குத் தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த கலைஞர்களின் வாழ்வில் ஒரு தீபம் ஏற்றப்பட்டு விட்டதாகத்தான் தோன்றியது.

டைரக்டர் சுப்ரமணியம், தன்னிடம் வேலை பார்த்த ஒரு நடிகரை (ஆர்.எம். சோமசுந்தரம்) அழைத்து, "இப்படி ஒரு சங்கம் ஆரம்பிக்கிறேன். நடிகர்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்பதுதான் ஒரே குறிக்கோள். நீ கொஞ்சம் இதைப் பொறுப்பாகப் பார்த்துக் கொள்" என்று கூறி, துணை நடிகர்கள் சங்கத்தைத் தொடங்கி வைத்தார்.

ராயப்பேட்டை நெடுஞ்சாலையில் சங்கம் இயங்க ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்தார். ஒரு வழக்கறிஞரை நியமித்து, சங்கத்துக்கான சட்ட திட்டங்களை வகுத்தார். விநியோகஸ்தரும் தமது நெருங்கிய நண்பருமான டி.வி. சுந்தரம் என்பவரைத் தலைவராக நியமித்தார்.

எம்.ஜி.ஆர்., டி. என். சிவதாணு, எஸ். வி. சகஸ்ரநாமம், பிரெண்ட் ராமசாமி இன்னும் சில கலைஞர்களை முக்கியப் பொறுப்புகளில் அமர்த்தி சங்கத்தை வழிநடத்தச் செய்தார்.

இந்தத் துணை நடிகர் சங்கத்தை, தென்னிந்திய நடிகர் சங்கம் என்று பெயர் மாற்றம் செய்து, சொஸைட்டி ஆக்ட்படி சட்ட திட்டங்கள் அமைத்த பெருமை எம்.ஜி.ஆரைச் சேரும்.

இப்படிச் சிலர் தீவிரமாகப் பாடுபட்டும் சங்கம் மட்டும் ஏனோ வளரவேயில்லை. நிதிப்பற்றாக்குறை என்பது, நிரந்தரமாகக் கவலைப்படுவதற்கான விஷயமாகவே இருந்து வந்தது. எம்.ஜி.ஆர். தவிர, சிவாஜி, எஸ்.எஸ். வாசன், சின்னப்பா தேவர், ஏவி.எம். செட்டியார் போன்றோர் சேர்ந்து பணம் போட்டு சங்கத்துக்காக நிலம் வாங்கி, கட்டடம் கட்ட முனைந்தார்கள். (தி. நகர் அபிபுல்லா சாலையில் இப்போதிருக்கும் வளாகம்.)

கட்டடம் கட்டுவதாக முடிவு செய்து, வாசன் அவர்கள் அடிக்கல்லும் நாட்டினார். ஆனாலும் ஒரு கட்டடம் கட்டும் அளவுக்கு நிதி சேரவில்லை.

அப்போது எம்.ஜி.ஆர்., முதல்வராக இருந்தார். தம்மால் நடிகர் சங்கத்துக்காக முழு நேரம் ஒதுக்க முடியாத நிலையில், எம்.ஜி.ஆர்.

ஒருநாள் என்னைக் கூப்பிட்டார்.

"ஆசை ஆசையா உருவான சங்கம் இது. நடிகர்களின் வளர்ச்சி, நலனுக்காக ஆரம்பமானது. ஆனா இந்த சங்கம் இன்னும் வளராம இருக்கறது, ரொம்ப வருத்தமா இருக்கு. தம்பி சிவாஜியை இதுக்குத் தலைமைப் பொறுப்பை ஏத்துக்கச் சொல்லுங்க. எப்படியாவது சங்கத்துக்கு ஒரு சொந்தக் கட்டடம் கட்டியே ஆகணும்" என்றார்.

"சிவாஜிக்கு மிக நெருக்கமானவன் என்பதால் நான் சொன்னால் அவர் கேட்பார் என்று எம்.ஜி.ஆர். நினைத்திருக்கலாம்.

எனக்கொன்றும் அதில் ஆட்சேபணை இல்லை என்பதால், "அதற்கென்ன, சிவாஜியிடம் நான் பேசுகிறேன்" என்று எம்.ஜி.ஆரிடம் சொல்லிவிட்டு, சட்டாம்பிள்ளை வெங்கட்ராமனுடன் சிவாஜியை சந்திக்கச் சென்றேன்.



• சிவாஜி



• மேஜர் சுந்தர்ராஜன்

"நான் தலைவராவது பெரிசில்லை. சங்கத்துக்குக் கட்டடம் கட்டணும்னா பேங்க்ல லோன் வாங்க வேண்டியிருக்கும். நிர்வாகத்தை கவனிக்க புதுசா தகுந்த ஆட்களை நியமிப்பேன். கட்டடம்



கட்ட ஆகிற செலவை (கடன்) நிர்வாகக் குழு அடைக்கற வரைக்கும் சங்கத்துக்குப் புதுசா தேர்தல் வைக்கக் கூடாது! இதுக்கெல்லாம் சரின்னு ஒப்புதல் தந்தா, நான் தலைமைப் பொறுப்பை ஏத்துக்கறதுல எந்தப் பிரச்னையும் இல்லை" என்று சிவாஜி சொன்னார்.

நான் இந்த நிபந்தனைகளை அப்படியே எடுத்துச் சென்று எம்.ஜி.ஆரிடம் சொன்ன போது, "அவர் இஷ்டப்படி செய்யட்டும். பொறுப்பு ஏத்துக்கத் தயார்னா சரி. ஆனா ஒண்ணு, சங்கம் நல்லா வளரணும்" என்றார் எம்.ஜி.ஆர்.

இந்தப் புதிய ஏற்பாட்டுக்கு நடிகர்கள் மற்றும் திரைத் துறையின் அனைத்துத் தரப்பினரிடமிருந்தும் நல்ல வரவேற்பு இருந்தது.

திட்டப்படி, சிவாஜி தலைவரானார். மேஜர் சுந்தர்ராஜன் செயலாளராகவும் நான் பொருளாளராகவும் அமர, இரண்டு உப தலைவர்கள், இருபத்தி நாலு கமிட்டி உறுப்பினர்கள் என்று நியமிக்கப்பட்டு துரிதமாக இயங்க ஆரம்பித்து சங்கம்.

வங்கியில் கடன் வாங்கி, கட்டடம் கட்டும் பணியை முதலில் தொடங்கினார் சிவாஜி.

அப்பப்பா! எப்படிப்பட்ட நாட்கள் அவை! ஷாஜஹான் தாஜ்மகால் கட்டியபோது கூட அத்தனை ஈடுபாடு காட்டியிருக்க மாட்டார்! பொழுது விடிந்தால் போதும்... நாங்கள் ஓடி வந்து கட்டடம் உருவாகிற இடத்தில் உட்கார்ந்து கொள்வோம்! ஒரு செங்கல், ஒரு துளி மணல் வீணானால் கூட சிவாஜி கவனித்துக் கேட்பார்! கட்டடம் உயர்ந்த ஒவ்வொரு அங்குலத்திலும் எங்கள் கவனம் பதிந்திருந்தது. அப்படிப் பார்த்துப் பார்த்துக் கட்டினோம்! அடிக்கடி முதல்வர் எம்.ஜி.ஆரைத் தொடர்பு கொண்டு வளர்ச்சி நிலை பற்றித் தகவல் தந்து கொண்டே இருப்போம்! அவரும் எங்களை உற்சாகமூட்டிக் கொண்டிருப்பார்.

சுமார் இருபத்திரண்டு லட்சம் செலவில் கட்டடம் உருவானவுடன் எம்.ஜி.ஆரே அதனைத் திறந்து வைத்து மகிழ்ந்தார்!

பெருமகிழ்ச்சியும் உற்சாகமும் நம்பிக்கையுமான நாட்கள் அவை. எப்படியும் நடிகர் சங்கம் இனி ஒரு நல்ல நிலைக்கு உயர்ந்து விடும் என்று தீவிரமாக நம்பினோம்.

கட்டடம் உருவாகி இயங்க



**"என்னது ஏழெட்டு இடத்தில் மொய் எழுதறாங்க?"**

**"மொய் பணம் வந்ததும் தர்றேன்னு ஏழெட்டு பேரிடம் கல்யாணத்துக்குக் கடன் வாங்கியிருந்தாராம்! அதான் கடன் கொடுத்தவங்க ஏழெட்டு பேரும் மொய் எழுதறாங்க!"**

**— கீழை அ. கதிர்வேல்**

ஆரம்பித்தவுடன் எங்கள் முன் இருந்த முதல் பிரச்னை அந்த இருபத்திரண்டு லட்ச ரூபாய்க் கடன். அதனை அடைத்தாலொழிய பிற வளர்ச்சிப் பணிகள் சாத்தியமில்லை என்கிற நிலையில் நாங்கள் மறுபடி எம்.ஜி.ஆரைச் சந்தித்து, என்ன செய்யலாம் என்று யோசனை கேட்டோம்.

எம்.ஜி.ஆர். சற்று யோசித்தபின், "ஒன்று செய்யுங்கள். தமிழ்நாட்டின் நாலு பெரிய நகரங்களைத் தேர்ந்தெடுத்து அங்கு நட்சத்திர இரவு நடத்துங்கள். முதலமைச்சர் பொது நிவாரண நிதிக்காக அந்த நிகழ்ச்சிகள் நடப்பதாக இருக்கட்டும். அதில் கிடைக்கும் வருமானத்தை வைத்து நான் உங்கள் கடனை அடைத்து விடுகிறேன்" என்றார்.

இந்த யோசனை சிறப்பான வெற்றி காணும் என்று தோன்றவே, சிவாஜியும் இதற்குச் சம்மதித்தார்.

திருநெல்வேலி, மதுரை, கோவை, சேலம் நகரங்களில் நடந்த அந்தக் கலை இரவு நிகழ்ச்சிகளை மாபெரும் சரித்திர சாதனை என்றே சொல்ல வேண்டும்.

வெறும் கேளிக்கூத்தான நட்சத்திர நிகழ்ச்சிகளாக அல்லாமல் அற்புதமான நாடகங்கள், இசை நிகழ்ச்சிகள், நகைச்சுவைக் காட்சிகள், நடனங்கள் என்று கண்டவர் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு போனது அந்த நிகழ்ச்சிகள்! அன்றைக்குத் திரையுலகில் கொடிகட்டிப் பறந்த பல நட்சத்திரங்கள் பங்குபெற்று சிறப்பித்த அந்த நிகழ்ச்சிகளால் முதலமைச்சர் நிதிக்கு சுமார் ஒரு கோடியே எண்பது லட்சம் வசூலானதாகக் கேள்வி.

நிகழ்ச்சிகளில் பங்குகொண்ட கலைஞர்களுக்கான போக்குவரத்து, உணவு பிற வசதிகளைத் தாமே செய்து தந்த அரசாங்கம், நிதியையும் தாமே நேரடியாகவே வசூலித்தது.

ஆனால் பேசியபடி ஏனோ நடிகர் சங்கக் கட்டடத்துக்கான கடனை அடைக்க அரசு தருவதாகச் சொன்ன பணம் வந்து சேரத் தாமதமாகிக் கொண்டே போனது. நானும் மேஜர் சுந்தர்ராஜனும் இதுகுறித்து நடையாய் நடந்து கொண்டிருந்தோம்.

ஐந்து லட்சம் மட்டும் முதல் தவணையாக வந்து சேர, அதன் பின் மூச்சுப் பேச்சே இல்லை!

வேறுவழியில்லாமல் நானும் மேஜரும் மீண்டும் எம்.ஜி.ஆரைச் சந்திக்கப் போனோம்:

"என்ன விஷயம்?" என்று கேட்டார்.

"ஐயா, கடனை அடைக்கத் தருவதாகச் சொன்ன தொகையில் ஐந்து லட்சம் மட்டும் தந்தீர்கள். மீதி இன்னும் வந்து சேரலையே?" என்றோம் தவிப்பாக.

எம்.ஜி.ஆர். சற்று நேரம் என்னை உற்றுப் பார்த்தார்.

"மீதி... நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? அடுத்த நிர்வாகம் வந்து அடைத்துக் கொள்ளட்டுமே?" என்றார் சாதாரணமாக.

நான் அதிர்ந்து விட்டேன். அடுத்த நிர்வாகம்...? என்ன சொல்ல வருகிறார் எம்.ஜி.ஆர்? எனக்குப் புரியவில்லை.

"என்ன சொல்றீங்க?" என்று அவரிடமே கேட்டேன்.

"புரியலையா? நீங்க ஒண்ணும் கடன் பற்றிக் கவலைப்பட வேண்டாம்... பேசாம சங்கத்துக்குத் தேர்தல் வைங்க. அடுத்த நிர்வாகம் வரும். அப்ப பார்த்துக்கலாம்!"

தேர்தல் வைப்பதா? சிவாஜி பொறுப்பு ஏற்பதற்கு முன்பே சொன்ன கண்டிஷனை இவர் மறந்து விட்டாரா?

கடன் அடையும் வரை தேர்தல் கூடாது என்று அவர் சொன்னதை இவர் ஒப்புக் கொண்ட பின்னால் அல்லவா அவர் தலைமைப் பொறுப்பை ஏற்கவே சம்மதித்தார்? இதெல்லாம் எம்.ஜி.ஆர். அறியாததல்லவே?

நான் இவற்றையெல்லாம் மீண்டுமொரு முறை எம்.ஜி.ஆருக்கு ஞாபகப்படுத்தினேன்.

அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார். நான் கூறி முடித்ததும் தம் கருத்திலோ, முடிவிலோ எவ்வித மாற்றமும் இல்லாதவராக,

"நீங்க கவலைப்படாம போங்க. அடுத்த நிர்வாகம் வந்து பார்த்துக்கட்டும்!" என்றார் தீர்மானமாக.

என்ன காரணம்? ஏன் இப்படி சொல்லி மாறினார்?

புரியாமல் தவித்தேன். என் தவிப்பைப் புரிந்துகொண்டவராக அவரே அதற்கான விடையையும் தந்தார்.

அதைக் கேட்டபோது நான் அடைந்த அதிர்ச்சிக்கு அளவே இல்லை!

(தொடரும்)



நான் ஒரு புகழ்மிக்க பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பில் இருக்கிறேன். இன்றைக்கு ஒரே வெறுப்பாக இருக்கிறது.

பின்னே என்னவாம்? உதவி ஆசிரியர் பணிக்காக விண்ணப்பித்து நேர்முகத் தேர்வுக்காக வந்திருந்த இளைஞர்களில் ஒருத்தரும் சரி இல்லை.

பத்திரிகைத் துறைக்கு வரவேண்டும் என்று நினைப்பவர்கள் ஓரளவாவது உலக விஷயம், இலக்கியம், வரலாறு தெரிந்தவர்களாக இருக்க வேண்டாமா?

வந்திருந்தவர்களின் அடிப்படை ஞானத்தைப் பரிசோதிக்க எளிமையாக ஒரு சொல்லில் விடையளிக்கும் வகையில் நூறு கேள்விகள் தயார் செய்து வைத்திருந்தேன். வந்த இளைஞர்களிடம் அதைக் கொடுத்து விடை எழுதச் சொன்னேன்.

இதில் ஐம்பது சதவீத மதிப்பெண்ணாவது பெறுபவர்களிடம் மட்டுமே மேலே இன்டர்வியூ பண்ண நினைத்திருந்தேன்.

என்ன அவலம்! ஒருத்தரும் 50 மார்க் கூட வாங்கவில்லை! எரிச்சலாக இருந்தது. எல்லோரையும் போகச் சொல்லி விட்டேன்.

# அங்கே என்ன அரட்டை?



வெறுமையான முகத்தோடு எல்லோரும் வெளியேறி விட்டார்கள் – ஒருத்தனைத் தவிர. அவன் மட்டும் வெளியே எங்கள் சீனியர் உதவி ஆசிரியரிடம் ஏதோ அரட்டை அடித்துக் கொண்டிருக்கிறான். சிபாரிசுக்கு காக்கா பிடிக்கிறானா?

நானும் அரைமணி நேரம் கண்ணாடி வழியாக அந்த இளைஞனை கவனித்துக் கொண்டிருந்தேன். அதற்கு மேல் பொறுக்கவில்லை. பெல் அடித்து உதவி ஆசிரியரைக் கூப்பிட்டேன்.

உதவி ஆசிரியர் உள்ளே நுழைந்ததும், "அந்தப் பையன் உங்களிடம் என்ன அரட்டை அடிக்கிறான்?" என்று காட்டமாகக் கேட்டேன்.

உதவி ஆசிரியர் விளக்கினார். அந்த இளைஞன் பல கேள்விகளுக்குத் தனக்குப் பதில் தெரியாத விஷயத்தைச் சொல்லி, அவரிடம் தெரியாத கேள்விகளுக்கெல்லாம் பதில்களை உண்மையான ஆர்வத்தோடு கேட்டுத் தெரிந்து கொண்டான் என்ற விஷயத்தைச் சொன்னார்.

நிச்சயம் இந்த இளைஞன் வித்தியாச மானவன்தான். தனக்குத் தெரியவில்லை, வேலையும் கிடைக்கவில்லை என்பதற்காக மனம் தளராமல், தெரியாத விஷயங்களைக் கேட்டுக் கொள்வோம் என்கிற ஆர்வம் நிச்சயம் மதிக்கப்பட வேண்டியதுதான்.

சொல்லிக் கொடுத்தால், புரிந்து கொள்வான். அந்த இளைஞனை உடனே உள்ளே அனுப்பச் சொன்னேன்.

— பாரதி சந்திரன்



எந்த ஒரு நல்ல விஷயத்திற்குமே ஆயுள் நான்கு நாள்தான் இந்த தேசத்தில் என்கிற முகுந்தனின் கருத்துக்கும், இஸ்மாயிலின் கருத்துக்கும் தேசிகாச்சாரி அளிக்கும் பதில் ஒரு வினாடி அவர்களையே திக்குமுக்காட வைக்கிறது.

"ஆமாம் அப்படின்னா நீங்கள்ளாம் நல்ல விஷயங்கள்ள நாட்டம் கொண்டவங்க இல்லியா?" - அந்தக் கேள்வியின் உட்பொருள் முகுந்தனுக்குப் புரிகிறது. தன் கருத்துப்படி பார்த்தால் தானே ஒரு கெட்டவன் என்கிற பொருள் வருகிறது. நல்லவன் என்று பார்த்தால் இந்த இருபத்தி நான்கு வயதிலும் மாறாமல் இருப்பதாய் ஆகிறது. இருந்தும் சமாளிக்கிறான்.

"நான் விஷயங்களுக்கு சொன்னது எங்களுக்கு எப்படிப் பொருந்தும்?"

"ஏன் பொருந்தாது... விஷயங்கள் யாரால உருவாகுது? உங்களால உங்களைப் போன்ற மனிதர்களால தானே...?"

"அப்படிப் பார்த்தா நூத்துக்குத் தொண்ணூறு பேர் இன்னிக்கு சரியானவங்க கிடையாதுங்கறதுதான் என் கருத்து."

"அப்படி இருக்குன்னே வெச்சுப்போம். மிச்சமிருக்கிற பத்து பேருக்கு அவங்க சமமாக மாட்டாங்க தெரியுமா உனக்கு? ஊருக்கு ஒரு வைத்தியன் போதும் முகுந்தன்."

"இது வாதத்துக்கு சரியா இருக்கலாம். ஆனா இன்றைய நடைமுறைக்கு மோகன்ராம் - நபீஸா காட்டியிருக்கற பெருந்தன்மைக்கு வேற பேர்தான் கிடைக்கும். 'பயந்துட்டாங்க - கோழைங்க - பத்தாம்பசலிங்கன்னு'தான் சொல்வாங்க" - முகுந்தன் அழுத்தமாய் மறுக்கிறான். இஸ்மாயிலும் இணைசேர்கிறான்.

"காந்திய விடவா மோகன்ராம் பொறுமைசாலி? திருவள்ளுவரை விடவா இவன் பெரிய கருத்து உள்ளவன்? பாரதியை விடவா இவன் சமூகக் கோபம் கொண்டவன்? சங்கரர், ரமணர், நபிகள் நாயகத்தை விடவா இவன் நல்லது சொன்னவன்?"

25

"அதுக்காக?"

"இத்தனை பேர் சொல்லியும் பேசியும் எழுதியும் வாழ்ந்து காட்டியுமே இந்த தேசம் திருந்தலையே... இனிதானா திருந்தப் போறாங்க... நாங்க அதை நம்பவா?"

"இஸ்மாயிலின் கேள்விக்கு தேசிகாச்சாரி பதில் சொல்லாமல் மோகன்ராமைப் பார்க்கிறார். 'நீதானே வலிதாங்கி. நீயே பதில் சொல்' என்கிறது அந்தப் பார்வை.

"தேசம் திருந்தலைங்கற வாதத்தை நான் ஒப்புக்க மாட்டேன்."

**இந்திரா சௌந்தர்ராஜன்**

சற்று இணக்கமான குரலில் அவன் பதில் தரத் தொடங்குகிறான்.

"அப்ப பாலும் தேனுமா பெருகி ஓடுது இப்போ...?"

"எப்பவுமே எங்கையுமே அப்படி ஓடினதில்ல. அது ஒரு மிகையான விளக்கம்."

"சரி இந்த தேசத்துல நல்லது இருக்கா இன்னும்...? பேப்பர் பார்த்தியா இன்னிக்கு...



தென்மாவட்டத்துல அண்ணன் தம்பிகள் வெட்டிக்கறாங்கடா..."

"ஆனா உலகம்கறது தென்மாவட்டம் மட்டுமில்லை முகுந்தன்..."

"முடிவா என்னதான் சொல்றே...?"

"நீ சொன்னியே அண்ணன் தம்பிங்க வெட்டிக்கறாங்கன்னு..."

"ஆமா... சொன்னேன் அதுதானே



**'இந்த மாதிரி நேரத்தில் எல்லாம் வானம் பார்த்து பிரார்த்தித்தால் அங்கிருந்து உதவிக்கு ஒரு கரம் வருமாமே... எத்தனை ரிஷிகள் சொன்ன சத்தியம் இது...'**



உண்மை."

"அதனாலதான் என்னைக் குத்தின சகோதரனை நான் இங்க திரும்பக் குத்தலை. காட்டியும் கொடுக்கலை. நெருப்பை நெருப்பால அணைக்க முடியாதுன்னு எனக்குத் தெரியும் முகுந்தன்."

"அப்படின்னா..."

"நான் படிச்ச பாரதி என் கோபத்தை இப்படித்தான் காட்டச் சொல்றான். வள்ளுவர், அவ்வை, ரமணர், நபிகள் எல்லாரும் இப்படித்தான் நடந்துக்கச் சொல்றாங்க.

# திசை நெசவு

"நான் மட்டுமில்லடா... நான் ஒரு கண்டக்காய். பெரிய பெரிய தியாகங்களை - பெரிய பெரிய செயல்களை சொல்லாம கொள்ளாம ரொம்பப் பேர் செய்துகிட்டுத்தாண்டா இருக்காங்க. அதனாலதான் அச்சு முறியாம பூமி சுத்திகிட்டு இருக்கு. எப்பவுமே அடிச்சா அது எல்லாருக் கும் தெரியும். ஆனா அணைக்கறது அப்படி இல்லை. அது தெரியாது. நல்ல விஷயங்களே இல்லைன்னா நான் இப்படிச் சிந்திச்சுப் பேச முடியுமா - நாமெல்லாம் கவலைப்படுவோமா?"

மோகன்ராமின் விளக்கம் தேசிகாச்சாரியை நெகிழ்த்துகிறது. ஒருநாள்

இவனும்தான் இந்த முகுந்தன் போல் தன்னிடம் கேள்வி கேட்டவன். ஆனால் இன்று இவனே பதில் சொல்லும் அளவு பக்குவப் பட்டிருக்கிறான். இருந்தும் நல்ல விஷயங்களில் மோகன்ராம் அளவு முகுந்தனுக்கோ இஸ்மாயிலுக்கோ நம்பிக்கை இல்லாமல் போய் விட்டதே? கவலைப்பட ஆரம்பிக்கிறார் தேசிகாச்சாரி.

இந்த மாதிரி நேரத்தில் எல்லாம் வானம் பார்த்து பிரார்த்தித்தால் உதவிக்கு அங்கிருந்து ஒரு கரம் வருமாமே? எத்தனை ரிஷிகள் சொன்ன சத்தியம் இது... எத்தனை மகான்கள் உணர்ந்து காட்டிய நிஜம் அது!

தேசிகாச்சாரியின் மனமும் 'சுற்றுச் சல சலப்பு, மருந்து நெடி, கேள்விச் சலனம்' எல்லாம் விலக்கி ஒருமுகப்படுகிறது.

அருகிலேயே ஒரு மரபெஞ்சு. அதில் ஏறி அமருகிறார். பத்மாசனம் கொள்கிறார்.

நேரத்துளி சப்தம் சொட்டாக காதில் விழுகிறது. முகுந்தனும் இஸ்மாயிலும் மௌனமாய் இதைப் பார்க்கின்றனர்.

இனி பேசிப் பயனில்லை... நமது கேள்விகளுக்கு அவரிடம் விடையும் இல்லை என்று முடிவு செய்தவர்களாக எதுவும் பேசாமல் கிளம்பக் கால் எடுக்கின்றனர்.

**வா**ர்டு அறை வாசலில் இப்பொழுது ஜான் ஆசீர்வாதம் தெரிகிறான். ரேஷன் கடைப் பெருச்சாளி!

'உன்னை கவனிக்க வேண்டிய இடத்துல கவனிச்சுக்கறேன்' என்று சொன்னவன், பார்க்க மதர்ப்பாக மாமிசமலையாக காட்சி தருபவன், இப்பொழுது பணிவாக கலக்கக் கண்களோடு நிற்கிறான். கையில் வயர் கூடை. அதில் ஆப்பிள், ஹார்லிக்ஸ் கூட்டணி.

முகுந்தன் அவனைப் பார்த்தபடியே நிற்க அவன் மோகன்ராமை நெருங்கி வருகிறான்.

"வாங்க..." மோகனிடம் வரவேற்பு.

"எப்படி இருக்க மோகன்ராம்?"

"எனக்கு ஒண்ணுமில்ல... நல்லாத்தான் இருக்கேன்."

"உனக்கு ரொம்பப் பெரிய மனசு. என்னை மன்னிச்சுடு மோகன்ராம்."

"ஐய்ய... என்ன இது பெரிய வார்த்தையெல்லாம் சொல்லிக்கிட்டு."

"உன்னை தட்டிவைக்கணும்னு முடிவு பண்ணினப்போ நானும் கூட இருந்தேன்."

"ஒஹோ அங்க அவங்க கூட இருந்து கொலை செய்ய ஏற்பாடு செய்துட்டு இங்க ஆறுதல் சொல்ற மாதிரி என்ன நிலைல இருக்கான்னு பாக்க வந்திருக்கியா?" – முகுந்தனின் இடைச்செருகல் ஆசீர்வாதத்தை கோபப் படுத்தவில்லை. மாறாக திடும்மென அவனை விசும்ப விடுகிறது.

"இல்ல தம்பி... சத்யமா இல்ல..." என்கிறான் வெடிக்கும் குரலில்.

"முகுந்தா கொஞ்சம் சும்மா இருக்கியா?" – மோகன்ராமும் கண்டிக்கிறான். ஆசீர்வாதத்தின் விசும்பலோ தொடர்ந்து கொண்டே போகிறது.

"என்ன இது சின்னக் குழந்தையாட்டம் அழுதுகிட்டு..." – மோகன்ராம் படுத்த நிலையில் கைகளை நீட்டி ஆசீர்வாதத்தின் கரத்தைப் பற்றுகிறான்.

"இனி நான் எப்பவும் அழும்படியா பண்ணிட்டாரு கர்த்தர்" என்று அவன் கரத்தை அழுந்தப் பற்றுகிறான் ஆசீர்வாதம்.

"என்ன சொல்றீங்க?"

"ஆமாம் மோகன், ரேஷன் கடைல நான் எவ்வளவோ ஏழைகள் வயித்துல அடிச்சதுக்கு ஆண்டவன் பதில் சொல்லிட்டான்."

"புரியும்படி சொல்லுங்க ஆசீர்வாதம்."

"என் ஆசை மகளுக்கு இதயத்துல ஓட்டையாம்! உயிர் வாழுறதே கஷ்டம்னு டாக்டருங்க சொல்லிட்டாங்க. என் பொண்டாட்டி அந்த நிலையிலும் என்னைப் பார்த்து கேட்ட கேள்விய என்னால தாங்கிக்க முடியலை. 'உனக்குத்தான் இதயம் இருந்தும் இல்லைன்னா உன் மகளுக்கும் அப்படியே ஆக்கிட்டார் பார்த்தியா கர்த்தர்'னு அவ சொல்லி அழுதப்போ என் உயிரே போயிடிச்சு. 'போய்யா போய் இனியாவது நல்ல காரியம் செய். என் மக பிழைக்கணும். அதுக்குண்டானதை செய்'யுன்னு துரத்தி விட்டா. எனக்கு உடனே உன் ஞாபகம்தான் வந்தது. வந்துட்டேன். நின்னு கொல்றதுன்னா என்னன்னு எனக்குப் புரிஞ்சு போச்சு மோகன்ராம். உடனே கொன்னா கூட இப்படி வலிக்காது. என்னை மன்னிச்சு என் மகளுக்காக பிரார்த்

---

*"உங்க வீட்டில் மாமியார் மருமகள் சண்டைன்னா கூட, ஒரு கட்டுப்பாட்டுடன் இருக்குமாமே?"*

*"ஆமாம். சனி, ஞாயிறு மற்றும் விடுமுறை தினங்களில் சண்டை போட்டுக்க மாட்டாங்க!"*

*– கீழை அ. கதிர்வேல்*



தனை செய் மோகன். நீ பிரார்த்தனை செஞ்சா நிச்சயம் கர்த்தர் ஓடி வருவார். ஏன்னா நீ பாவிகளுக்காக ரத்தம் சிந்தினவன். எனக்கு அவர் முகத்தைப் பாக்கற யோக்யதை கூட இல்லை."

ஆசீர்வாதத்தின் விசும்பலில் ஆஸ்பத்திரியே திரும்பிப் பார்க்கிறது. கூடவே அர்த்த புஷ்டியோடு தர்மமுமல்லவா? தேசிகாச்சாரியும் தனது குட்டி நிஷ்டையைக் கலைக்கிறார்.

இஸ்மாயிலும் முகுந்தனும் பிரமித்து நிற்கின்றனர்.

நல்லதெற்கெல்லாம் ஆயுள் நான்கு நாட்கள்தானா?

புழுதி பறக்க வந்து நிற்கிறது டாடா சுமோ. வாரிச் சுருட்டிக் கொண்டு இறங்குபவர் பரமக்குடி நரசிம்மன். மோகன்ராமுக்கு நேர்ந்த விபரீதம் பரமக்குடியிலிருந்து புயல் வேகத்தில் இழுத்து வந்திருக்கிறது.

உள்ளே நுழைவதிலேயே அதன் ஆக்ரோஷமும் தெரிகிறது. "அக்கா... அக்கா... என்ன இது ஏதேதோ கேள்விப்பட்டேனே..."

உள்ளே மகாலட்சுமி கூடச்கூட கஞ்சி காய்ச்சி எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரி கிளம்பத் தயாராக இருக்கிறாள். பதறியபடி வரும் தம்பியைப் பார்த்து கூடையைக் கீழே வைக்கிறாள். சலனமில்லாமல் வெறிக்கிறாள்.

"என்னக்கா ஒண்ணும் பேச மாட்டேங்கறே - ஆமாம் எங்க மாப்ளை?"

"என்னடா கேள்வி இது... அவன் இப்ப பெரிய ஆஸ்பத்திரியில..." என்கிறாள் மிக சாதாரணமாக.

"என்னக்கா நீ... எவ்வளவு பெரிய அநியாயம் நடந்துருக்கு. சாதாரணமா இருக்கே நீ...?"

"சரி சரி கிளம்பு. ஆஸ்பத்திரிக்குப் போய்க்கிட்டே பேசுவோம்."

"ஆமாம்... எங்க கனகா?"

பதிலுக்கு அவள் காய்கறி கூடையுடன் உள்ளே நுழைகிறாள்.

"வாங்கப்பா... வாசல்ல கார் பார்த்தேன். இப்பத்தான் வந்தீங்களா?" - கனகாவிடமும் பெரிதாகக் கவலை, பதட்டமெல்லாம் இல்லை. ஆச்சரியம் பிடுங்குகிறது நரசிம்மனுக்கு.

"ஆமா என்ன இது துளி கூட ஒரு படபடப்பு இல்லாம இருக்கீங்க ரெண்டு பேரும்? எனக்கு போன் வந்தப்போ ஒரு நிமிஷம் மூச்சே நின்னு போச்சு தெரியுமா?"

"சரி சரி நட... கனகா வீட்ட பாத்துக்கம்மா."

மகாலட்சுமி நடக்க ஆரம்பிக்கிறாள். நரசிம்மன் மகளைப் புரியாமல் பார்த்துவிட்டு மகாலட்சுமியைத் தொடருகிறான். மகாலட்சுமி கார் இருந்தும் தெருவில் இறங்குகிறாள்.

"அக்கா கார்ல போவோம்."

"வேண்டாம் நச்சு. நடப்போம். அதுதான் உடம்புக்கும் நல்லது. நீ வேணா கார்ல வா. அடப்பாவமே! உனக்கு சாப்பிடக் கூட ஒண்ணும் தராம இழுத்துகிட்டு வந்துட்டேனே..."

என்ன பதில் இது? நரசிம்மனை பிசைகிறது. அரைமனதாய் அவரும் தொடர்ந்து நடக்கிறார். எதிர்ப்படும் ஒருவன் மகாலட்சுமியிடம் விசாரிக்கிறான்.

"எங்க மகா... மகனுக்கு கஞ்சி கொண்டு போறியா?"

"ஆமாம்..."

"உன் மகன்கிட்ட சொல்லு. நான் இப்ப குடிக்கறதில்லைன்னு."

"சொல்றேன்... ஆமா நீ சொல்றது நிஜமா - நம்பலாமா?"

"சத்யமா மகா. எப்ப அந்த நாயுங்க நம்ம மோகனை இப்படி குத்தி படுக்க போட்டுட்டாங்களோ, அப்பவே எனக்கு வெறுத்துப் போச்சு. அவனுங்கள தெருவை விட்டே துரத்தணும். நாம குடிக்காம இருந்தா அவன் போய்த்தானே தீரணும்?"

"சொல்றேன்... சொல்றேன்..."

நரசிம்மன் வியப்போடு அதைக் கேட்டு மகாலட்சுமியைப் பார்க்க, அவளிடம் ஒரு சின்னப் புன்னகை.

"என்ன பாக்கறே நச்சு... நான் ஏன் பதட்டப்படலைன்னு இப்ப தெரியுதா... மோகன் வயித்துல விழுந்த கத்திக்குத்து அவன் பொறுமையா, அகிம்சையா நடந்துகிட்டதால ரொம்ப பேர் மனசுலயும் விழுந்துடிச்சு. இந்த ஜென்மத்துல இவங்கள திருத்த முடியாதுன்னு நினைச்ச ரொம்பப் பேர் மனசு மாறியிருக்காங்க. அவன் குத்துப்பட்டு விழுந்த நிமிஷத்துல இருந்து இந்த நிமிஷம் வரை



''தெரு விளக்குல படிச்சி எத்தனை பேர் முன்னேறி இருக்காங்க தெரியுமாடா?''

''நான் என்னப்பா பண்ணட்டும், நம்ம தெருவுக்குத்தான் விளக்கே கிடையாதே!''

– ராஜாதிருவேங்கடம்

சாராய ஒட்டம் இல்லை. இதை எல்லாம் பாக்க சந்தோஷமா இருக்கும்போது எப்படிப் பதட்டப்பட முடியும்?"

"அது சரி... மோகன் உடம்புக்கு ஒண்ணு மில்லியே?"

"ஆண்டவன் புண்ணியத்துல எல்லாம் நல்லாயிடிச்சு. பத்து நாள் கழிச்சு தையல் பிரிச் சுடலாமாம். அதுவரை படுத்தே இருக்கணும்" - பேச்சோடு பாதையில் பிரியும் ராவுத்தர் தெருவில் நுழைகிறாள்.

"இந்தப் பக்கம் எங்க போறே?"

"வா சொல்றேன்..." -

இருவரும் நபீஸா வீட்டினுள் நுழைகின்றனர். திரைச்சீலை விலகுகிறது. பானுவின் முகம் தெரிகிறது!

"நீ எப்ப வந்தே இங்கே...?"

"தேசிகாச்சாரி மாமாதான் உதவியா இருன்னு கொண்டு வந்து விட்டாரு... ஆமாம் அவருக்கு எப்படி இருக்கு?"

"உனக்கு மாங்கல்ய பிராப்தமும் பலமும் இருக்கறதால அவன் நல்லபடியா பொழைச்சு கிட்டான் பானு..." என்று மகாலட்சுமி பானு வுக்கு திருஷ்டி கழிக்கிறாள். நறுக்கென்று குத்துகிறது நரசிம்மனுக்கு...

"மகா என்ன சொல்றே நீ?" - அவர் கேள்வியை ஒதுக்குகிறது நபீஸாவின் அழைப்பு.

"வா மகாலட்சுமி வா! வா..."

"நல்லா இருக்கீங்களா? வலி எல்லாம் ஒண்ணுமில்லியே?"

"அல்லா அருளால எல்லாம் தாங்கிக்கற மாதிரிதான் இருக்கு. என் பேத்தி வேற, பக்கமா வந்துட்டாால்ல? எல்லாம் இனி எனக்கு தானா சரியாயிடும். அது இருக்கட்டும். வந்த துல இருந்தே பானுவுக்கு இங்க கால் நிற்கலை. எப்பப் போய் மோகனை பார்ப்போம்னு துடிக்கறா. கூட்டிக்கிட்டு போய் வா மகாலட்சுமி..."

"அதுக்கென்ன... இளைப்பாறிட்டு..."

மகாலட்சுமி பானுவை அழைக்க, பானு பாய்ந்து உள் ஓட, நரசிம்மன் முகத்தில் பிரளய ரேகைகளின் விரிவு.

"ஆமா யார் அது?"

"என் ஒண்ணு விட்ட தம்பி. பரமக்குடியில இருக்கான். பெரிய வக்கீல்."

"உக்காரச் சொல்லு... ஏதுக்கு நிக்கறாரு உக்காருங்க தம்பி."

அந்தக் கரிசனத்தை காதுல வாங்கிக் கொள்ளாமல் நரசிம்மன் கால்கள் வீதி வாசல்படியில் போய் நிற்கின்றன.

நேசமும் அன்பும் பெருக்கெடுக்கத் தொடங்கி விட்டால் எவர் வீட்டு வாசலிலும் எவரும் நெஞ்சு நிமிர்த்தி நிற்க முடியும் என் பதற்கு சான்றாக...

அதே இருவரும் வேறுபட்டிருந்தால் இப்படி நிற்க முடியுமா? இங்கே இந்நேரம் போலீசின் கால்கள் அல்லவா திரிந்தபடி இருக்கும்...?

நரசிம்மனுக்கு அதெல்லாம் தெரிந்திருக்க நியாயமில்லை. மனது கனகா என்னும் பெண் வசம் சிக்கி விட்டது. அவள் இருக்க இந்தப் பெண்ணை எப்படி மகாலட்சுமியால் மருமக ளாக நினைக்க முடிகிறது?

என்ன நடக்கிறது இங்கே... புரிய வில்லையே?

குழம்பிக் கொப்பளிக்கும் போதுதான் அந்தச் சம்பவமும் நடக்க ஆரம்பித்தது.

ராவுத்தர் தெருமுனையில் குடிபோதையில் தன் குறி தப்பி விட்ட பிசகை வார்த்தைப் படுத்திக் கொண்டும், நபீஸா வீட்டில் பானு இருப்பதைத் தெரிந்து கொண்டும் வந்து கொண்டிருக்கிறான் தாமு.

சாலைப் பேருந்துகளும், கார்க்காரர்களும் அவன் நிலை பார்த்து நின்று வளைத்துச் செல்லப் பார்த்தும் விதி அவனை விட வில்லை. ஒரு லாரியின் முன்பாகம் கடந்து பின்சக்கரத்தின் முன் தன்னையறியாமல் போதையில் விழுகிறான். விழுந்தது தெரியா மல் பின் சக்கரங்கள் அவன் மேல் ஏறியதில் அவனது போதை உதட்டைப் பிளக்கிறது கூக்குரல்!

அது வீட்டினுள் நேசமுடன் பேசியபடி இருக்கும் நபீஸா, மகாலட்சுமி காது வரைக்கும் கூடக் கேட்கிறது.

(அடுத்த இதழில் முடியும்)

---

***"கட்சிக்கு கட்சி தாவாத உங்களை மாதிரியே உங்க பையனும்..."***

***"என்ன சொல்ல வர்றீங்க?"***

***"ஐந்து வருஷம் ஆனாலும் வேற கிளாஸுக்குப் போகாம ஒரே வகுப்புல இருக்கான்!"***

**- கே. ராஜாதிருவேங்கடம்**





• முகப்பு



## தி.மு.க. மாநாடு ஓர் எக்ஸ்பிரஸ் ட்ரெய்லர்

வருவதைப் போன்ற கோட்டைகளை ஒத்த 210 அடி நீளமும் 74 அடி உயரமும் கொண்ட முகப்பு. கிட்டத்தட்ட 200 கலைஞர்களின் கைவண்ணத்தில் படுவேகமாக உருவாகி வருகிறது முன்முகப்பு!

இந்த மாநாட்டின் முதுகெலும்பாக

# தயாராகிறது சேலம்...

சேலத்தின் வெயிலைப் பற்றி ஸ்பெஷலாகக் குறிப்பிடத் தேவையில்லை. அந்த வெயிலிலும் நூற்றுக்கணக்கானவர்கள் சேலம் நகர் முழுவதிலும், மற்றும் மாநாடு நடக்கும் 20 ஏக்கர் பரப்புள்ள திடலிலும் சுறுசுறுப்பாக செயல்பட்டு வருகிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஒன்பதாவது மாநாடு இது. ஃபீனிக்ஸ் பறவையைப் போலத் துடிப்புடன் எழுந்து கலைஞர் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றிய பிறகு கூட்டப்படும் முதல் மாநாடு என்பதால் எதிர்பார்ப்புகளும் அதிகம். பிரும்மாண்டங்களும் அதிகம்.

திரும்பிய இடமெல்லாம் மாநாடு பற்றிய பெரிய பெரிய வண்ணமயமான கட்-அவுட்கள். கிட்டத்தட்ட எல்லா சுவர்களிலும் மாநாடு பற்றிய விளம்பரங்கள். மாநாட்டுத் திடலில் வாயில் முகப்பு வெகு பிரும்மாண்டம். சரித்திரப் படங்களில்

இயங்கி வருபவர் விவசாயத் துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம். ஒரு மாதத்திற்கும் மேலாக சேலத்தில்தான் காம்ப். பறந்து கொண்டிருந்தவரைப் பிடித்துக் கொஞ்சம் பேசினோம் :

"ஓமலூர் மெயின் ரோட்டிலிருந்து பிரிந்து இரும்பாலை செல்லும் இடத்தில் மாநாடு நடக்கும் திடலுக்கு வந்ததுமே இது



• 74 அடி நீள கொடி கம்பம்



• கண்ணைக் கவரும் சிற்பங்கள்

சேலம்தானா அல்லது கோடம்பாக்கமா என சந்தேகம் வரும் அளவிற்கு உள்ளது. முகப்பைத் தாண்டி உள்ளே நடக்கும் விஷயங்கள் பற்றிச் சொல்லுங்கள்!"

"மாநாட்டுப் பந்தலின் விஸ்தீரணம் எவ்வளவு தெரியுமா? 650 அடி நீளம். 450 அடி அகலம். எண்ணிலடங்கா லாரிகள் ராமசாமி படையாச்சி மாவட்டத்திலிருந்து சுமந்து வந்த ஓலைக் கீற்றுகளால் பின்னப்பட்டப் பந்தல். மைய மேடை 74 அடி நீளமும் 50 அடி அகலமும் உடையது. அதே போல முகப்பு வாயிலின் நீளம் 74 அடி. முதல்வர் கலைஞர் ஏற்றி வைக்கப் போகும் கொடிக் கம்பத்தின் உயரம் 74 அடி!"

"74 அடிக்கு ஏன் இத்தனை முக்கியத்துவம்?"

"முதல்வரின் 74 வயது முடிவுவுள்ளதைக் குறிக்கும் முகமாக! தொண்டர்களுக்குச் சாப்பாடு வசதிக்காக 120 சமையல் கூடங்களில் பொட்டலங்களில் சைவ மற்றும் அசைவ உணவுகள் வழங்கப்பட உள்ளன. அது தவிர சிற்றுண்டி விடுதிகளும் ஏராளமாக அமைக்கப்பட உள்ளன."

"கலந்து கொள்ளும் தலைவர்களுக்கான உணவு?"

"பொதுவாக தலைவர்கள் மாநாட்டின்பொழுது சாப்பிடும் வழக்கம் உடையவர்கள் அல்லர். அது தவிர தொண்டர்களுக்கு குளிக்கும் வசதி, குடிநீர் வசதி, சின்டெக்ஸ் டேங்குடன் கூடிய உலர் கழிப்பிடங்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன."

"முக்கியப் பிரமுகர்களின் தங்கும் வசதிக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?"

"சேலத்தில் உள்ள 35 பெரிய கல்யாண மண்டபங்களை வாடகைக்குப் பேசியுள்ளோம். இந்த மாவட்டத்தினருக்கு இந்த மண்டபம் எனப் பிரிக்கப்பட்டு தகவல்கள் உரிய மாவட்டத்தினருக்கு

> **எ**ழுபத்தைந்து கோடி ரூபாய் செலவில் சேலம் நகரம் எங்கும் ஒரே நாளில் 700 சோடியம் விளக்குகள் கேபிள் கனெக்ஷன் மூலம் எரியப் போகின்றன! துரிதகதியில் சாலைகள் செப்பனிடப்பட்டு வருகின்றன. மாநகராட்சி குப்பை வாரிகள் புது சுறுசுறுப்பைப் பெற்றது போல வீதி வீதியாக குப்பை அகற்றும் பணியில் ஈடுபடுத்தப்படுள்ளன. இவையனைத்தும் மாநாடு சம்பந்தப்படாத நகராட்சி சார்ந்த விஷயங்கள் என மேயர் மறுக்கக்கூடும். இருப்பினும் நீர் உயர நெல் உயரும் கதையாக சேலம் நகர மக்களுக்கு நகர வசதிகள் மேம்பட்டு வருவதில் மகிழ்ச்சிதான்.



• மேயர் சூடாமணி



• வீரபாண்டி ஆறுமுகம்

**— நேரடி ரிப்போர்ட்**

# "என்னைத் தவிர இருநூறு பேர்!"

**சேலம் மாநாடு நடக்கவிருக்கும் திடலின் நுழைவாயில் மற்றும் உள்ளே கண்காட்சியில் இடம்பெறப்போகும் தமிழர்களின் சுதைச் சிற்பங்களையும் உருவாக்கிவரும் கோலிவுட் ஆர்ட் டைரக்டர் எஸ்.டி.செல்வத்துடன் ஒரு மினி பேட்டி :**

**கேள்வி :** முகப்பு நுழைவாயில் பற்றிக் கூறுங்களேன்?

**எஸ்.டி. செல்வம் :** 210 அடி நீளமும் 74 அடி உயரமும் கொண்ட இந்த முன்முகப்பில் ஒரு பிரதான வாயிலும், இரண்டு துணை வாயில்களும் இடம் பெறுகின்றன. இவற்றின் உச்சியில் மாடங்களுடன் கூடிய 7 கோபுரங்கள் இடம்பெற உள்ளன. இந்தக் கோட்டையை அழகுபடுத்த அன்னம், சிங்கம், குதிரை, வீரத் தமிழர்கள் ஆகிய சிலைகள் ப்ளாஸ்டர் ஆஃப் பாரீஸில் செய்யப்பட்டு வருகின்றன.

**கேள்வி :** குறிப்பிடும்படியான ஸ்பெஷாலிட்டி இதில் என்ன உள்ளது?

**எஸ்.டி. செல்வம் :** பூஷ்வலா கோட்டை நுழை வாயில்கள் போல செட்கள் போடும் பொழுது எந்தவித கூடுதல் வேலைப்பாடும் இருக்காது. ஆனால் நான் இந்தச் சிற்பங்களிலும், கோபுரங்களிலும் முழுவதும் ஆர்னமென்டல் (ORNAMENTAL) வேலைப்பாடுகளைப் பார்ப்போர் கண்களை சுண்டி இழுக்கும் விதமாக அமைத்துள்ளேன்.

**கேள்வி :** வேறு என்ன புதியதாக நிர்மாணிக்கப் போகிறீர்கள்?

**எஸ்.டி. செல்வம் :** திராவிடியன் கல்சுரை பிரதிபலிக்கும் விதமான சிற்பங்கள், பரதக் கலை சிற்பங்கள், அண்ணா சமாதியின் மினியேச்சர் குறிப்பிடும்படியாக இருக்கும்.

**கேள்வி :** எத்தனை கலைஞர்கள் உங்கள் கீழ் பணியாற்றுகிறார்கள்? இதற்குத் தேவையான பொருட்கள் எங்கிருந்து வருகின்றன?

**எஸ்.டி. செல்வம் :** கலைஞர்கள் என்றில்லை. கார்பென்டர்ஸ், ஓவியர்கள், வண்ணம் தீட்டுபவர்கள் என 200 பேருக்கும் குறையாமல் என் மேற்பார்வையில் வேலை பார்க்கிறார்கள். ஸ்க்ருவிலிருந்து ப்ளாஸ்டர் ஆஃப் பாரீஸ் வரையில் எல்லாமே சென்னையிலிருந்துதான் தருவிக்கப்படுகின்றன. பெயிண்ட் வகைகள் மட்டும் சேலத்திலிருந்து பெறப்படுகிறது.



• செல்வம்

அனுப்பப்பட்டு விட்டன."

"தஞ்சாவூர் சோகம் இன்னும் ஆறாத நிலையில் தமிழக மக்கள் உள்ளனர். இந்த நிலையில் பருவ மழை துவங்காத, கடுமையான வெயிலில் 5 லட்சம் தொண்டர்கள் கூடப் போகும் இந்தப் பெரிய மாநாட்டிற்கு எந்த முறையில் பாதுகாப்பு வசதிகள் செய்யப்பட்டுள்ளன?"

"தஞ்சாவூரில் கோயில் கும்பாபிஷேகத்தின் பொழுது நிறுத்திவைக்கப்பட்டிருந்த தீயணைப்பு வாரிகளில் தண்ணீர் இடையாது. இங்கு அவ்வாறு நேராது! முழுக் கொள்ளளவு தண்ணீருடன் நாலு இடங்களில் தீயணைக்கும் வாரிகள் தயார் நிலையில் உள்ளன. கிழக்கு, மேற்கு ஆகிய இரு இடங்களிலும் 15 அடி அகலத்திற்கு இரண்டு எமர்ஜென்ஸி வாயில்கள் போடப்பட்டுள்ளன. 'V' வடிவ முறையில் பந்தல். முழுவதும் ட்யூப் லைட்டுகள். PVC பைப்களின் ஊடே வயரிங் கொடுக்கப்பட்டு போடப்பட்டிருப்பதால் ஷார்ட் ஸர்க்யூட்டிங் மூலமாக விபரீதம் நிகழ்வதற்கு சந்தர்ப்பங்கள் மிக மிகக் குறைவு. மாநாட்டுப் பந்தலை ஒட்டி வாண வேடிக்கை அறவே கூடாது என தொண்டர்களுக்கு ஸ்ட்ரிக்ட் உத்தரவே கொடுத்து விட்டோம்! இது தவிர எமர்ஜென்ஸி மருத்துவ சிகிச்சைக்காக ஆம்புலன்ஸ், ஒரு மருத்துவக் குழு, இரண்டு படுக்கை வசதிகளுடன் கூடிய

மினி டிஸ்பென்சரி திடலுக்குள் உண்டு. மேயருக்குத் தெரியாததா?"
(சொல்லிவிட்டு அருகிலிருந்த மேயர் சூடாமணியைப் பார்த்துச் சிரிக்கிறார்.)

"பொது மக்களுக்கு இடைஞ்சல் ஏற்படாவண்ணம் போக்குவரத்தை எப்படிக் கட்டுப்படுத்தப் போகிறீர்கள்?"

"ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து வரும் வாகனங்களை அவர்களது திசைகளுக்கு ஏற்ப தனித்தனியாக பார்க்கிங் பாயிண்டுகளை ஏற்படுத்திக் கொடுத்துள்ளோம். தொண்டர்களைக் கொண்டு தகவல் மையங்கள் அமைத்து வெளிமாநிலங்களிலிருந்து வருபவர்களை முறைப்படுத்த ஏற்பாடு செய்துள்ளோம். பேரணி நடைபெறும் பொழுது வெளியிடங்களுக்குச் செல்ல நேரிடும் பொதுமக்களுக்கு எந்தவிதத்திலும் இடையூறு நேராவண்ணம் மாற்றுப் பாதைகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன."

"மீடியாக்களிடம் எந்த அளவு எதிர்பார்ப்பு இருக்கிறது?"

"முதல்வர் கலைஞருக்கும் பத்திரிகைக்காரர்களுக்கும் உள்ள நெருக்கத்தை தனியாகச் சொல்ல வேண்டியதில்லை. இது எலக்ட்ரானிக்ஸ் யுகமாயிற்றே! கிட்டத்தட்ட 12 தொலைத் தொடர்பு நிறுவனங்கள் மாநாடு பற்றி கவரேஜ் செய்ய வருகின்றன. ஸ்டார் ப்ளஸ்ஸும், ஜீ டீவியும் வருகின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! இது தவிர தபால் நிலையக் கிளை ஒன்று மாநாட்டிற்காக ஸ்பெஷலாக இயங்கும். டெலிஃபோன் இலாகாவே அவர்கள் தேவைக்காக இரண்டு எஸ்டிடி பூத் நிறுவுகிறார்கள். கட்சிச் சார்பில் நாங்கள் மேலும் ஒரு எஸ்டிடி பூத்தும் ஃபாக்ஸும் ஏற்பாடு செய்துள்ளோம். ஸதர்ன் ரயில்வே சிறப்பு ரயில்கள் விட இருக்கின்றதோடு மாநாடு நடக்கும் இடத்திலேயே புக்கிங் கவுண்டர் ஒன்றை ஏற்படுத்தித் தர இசைந்துள்ளது. 5 லட்சம் தொண்டர்கள், மூன்று நாட்கள் சேலத்தில் கூடுவது என்றால் அவ்வளவு எளிதா என்ன?"

"மாநாட்டின் ஹைலைட்ஸ் என்ன?"

"தமிழர் நாகரிகத்தை வெளிப்படுத்தும்விதமாக திராவிட இயக்க வரலாறு பற்றிய கண்காட்சி அமைக்கப்பட உள்ளது. 'கலைஞர் 74' என்ற பெயரில் ஒரு புகைப்படக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. (நடத்துபவர், நமது யோகா!) கலைஞரின் அபூர்வமான இள வயதுப் புகைப்படங்கள் இதில் இடம்பெறப் போகின்றன."

சேலத்திலிருந்து: **சத்தியப்ரியன்**
படங்கள் : **வி. பிரபாகர்**

## யாரைப் பார்த்து யார்?



"கலைஞர் நடந்து வரும்போது ஒருமுறை புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்தேன். நேரே நின்று எடுத்ததால், எனக்குத் திருப்தியளிக்கும்படி அது அமையவில்லை. லேசாய் பக்கவாட்டிலிருந்து எடுத்தால் நன்றாய் இருக்கும் என்று கருதினேன். என் அருகே நின்று கொண்டிருந்த ஸ்டாலினைச் 'சுட்டிக் காட்டி, 'அவரைப் பார்த்து நடந்து வாருங்களேன்' என்று நான் கேட்டுக் கொண்டபோது, சிரித்துக் கொண்டே அவர் சொன்ன பதில்:

"ஸ்டாலின்தான் என்னைப் பார்த்து நடக்க வேண்டும், நான் ஸ்டாலினைப் பார்த்து நடக்கலாமா?"

- புகைப்படக் கலைஞர் யோகா
கூறக் கேட்டவர்:
**மௌலஷ்மி**

---

**சே**லம் மேட்டூரை அடுத்த [illegible]சாண்டியூர் ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளி ஆசிரியை மணிமேகலையிடம் [illegible]ங்கவன்னி ஊராட்சி ஒன்றிய திமுகவினர் மாநாட்டுக்காக நன்கொடை கேட்[illegible]ப் போக, ஆசிரியை மறுக்க, இளைஞரணிச் செயலாளர் முருகன் என்பவர் ஆசிரியையின் தாலிக் கொடியைப் பதித்தது பொதுமக்களிடம் பீதியைக் கிளப்பி விட்டிருக்கிறது! ஆனால் 17.6.97 அன்று மாநாட்டு ஏற்பாடுகளை மேற்பார்வையிட வந்த சென்னை மேயர் மு.க.ஸ்டாலின், மேற்சொன்ன முருகனைக் கட்சிப் பதவியிலிருந்து நீக்கி விட்டதாக அறிவிப்பு கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்.

அரசின் திங்களிருமுறை ஏடு

# தமிழரசு

இப்பொழுது முற்றிலும் புதிய பொலிவுடன் வெளிவருகிறது.







கதை, கவிதைகள்



அரசின் திட்டங்களின் செயல்பாடு



மருத்துவப் பகுதி



அறிவியல் செய்திகள்



மாணவர் பகுதி



நேர்காணல்



எங்களூர் பிரச்சனை

போன்ற பல்சுவைச் செய்திகளுடன்
இலக்கியப் பெட்டகமாக
வெளிவருகிறது.

தவறாது படியுங்கள்

# தமிழரசு

ஆண்டு சந்தா ரூ. 72/-



# செய்தித் துறையின் கடந்த ஓராண்டுப் பணிகள்...

- புதிய பொலிவுடன் வான் புகழ் வள்ளுவர் புகழ் பாடும் வள்ளுவர் கோட்டம் ரூ.84.94 இலட்சம் செலவில் சீரமைக்கப்பட்டுள்ளது.
- அண்ணா சதுக்கம் பளிங்குக் கூடமாக மேம்படுத்த ரூ. 1½ கோடி ஒதுக்கீடு.
- அண்ணாவின் நினைவு இல்லம் (காஞ்சீபுரம்) - மேம்பாட்டுப் பணி ரூ. 4.20 இலட்சம் - ஒதுக்கீடு.
- கன்னியாகுமரி மாவட்டம், நாகர்கோவில் - ஜீவா நினைவிடம் அமைக்க ரூ. 15.50 - இலட்சம் ஒதுக்கீடு.
- மகாகவி பாரதியார் இல்லம் ரூ. 8.3 இலட்சம் செலவில் சீரமைப்பு.
- இலக்கியம் மணம் கமழும் நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு.
- அரசின் அறிவிப்புக்களையும் திட்டங்களையும் கிராம மக்களுக்கு தெரியப் படுத்தும் வகையில் "அரசு செய்தி" வார சுவர்ப் பத்திரிக்கை.
- தமிழரசின் இலக்கியப் பெட்டகமாக இலக்கிய மலர்.
- பாரபட்சமின்றி பத்திரிக்கைகளுக்கு விளம்பரம். விளம்பரச் செலவில் சிக்கனம்.
- பருவ இதழ்கள் - தனியார் தொலைக்காட்சி செய்தியாளர்களுக்கு அடையாள அட்டை.
- பத்திரிகையாளர் ஓய்வூதியம் ரூ. 500 லிருந்து ரூ.1,000 ஆக உயர்வு, அதிகம் பயன் பெறும் வகையில் விதி முறைகள் தளர்வு.
- பத்திரிகையாளர் குடும்ப உதவி நிதி ரூ.25,000/-.
- அரசுப் பொருட்காட்சியில் பெரிய அளவில் கட் அவுட்டுகள் இன்றி அரங்குகள் - செலவில் சிக்கனம்.



வெளியீடு : இயக்குநர், செய்தி-மக்கள் தொடர்புத்துறை, சென்னை

DIPR.502.DIS.97



• ஓ.என்.ஜி.சி.

# கணக்கை முடக்கினால் கம்பெனிகள் முடங்காதா!

**பு**லி வருது புலி வருது கதையாக பெட்ரோல் விலை உயர்வு இன்னமும் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது.

'விலையை உயர்த்துவதைத் தவிர வேறு வழியில்லை' என்கிறார் பிரதமர். நிதியமைச்சர் டெல்லி, பம்பாய், சென்னை என ஊரூராகப் போய் இதே கருத்தை எதிரொலிக்கிறார். சந்திரபாபு நாயுடுவும், 'ஆமாமாம் விலையை உயர்த்தியே தீர வேண்டும்' என்று ஒத்து ஊதுகிறார்.

ஆனால்... ஐக்கிய முன்னணி வழிகாட்டுக் குழு கூட்டம் கூடுகிறது. பெட்ரோல் விலை உயர்வு பற்றிய பேச்சு உண்டா என்றால்... ஊஹூம், மூச்! அடுத்த கூட்டத்துக்கு அந்த முடிவு ஒத்திப் போடப்படுகிறது.

இடதுசாரியினர் தங்கள் பங்குக்கு மேலான யோசனைகளைத் தெரிவிக்கிறார்கள். Oil Pool கணக்கிலிருந்து ராவ் அரசு துடைத்து எடுத்த பணத்தை வட்டியும் முதலுமாகத் திருப்பிப் போட வேண்டும் என்பது ஒரு யோசனை. நடக்கிற காரியமா அது! அந்தக் கணக்குப்படி 26,000 கோடி ரூபாயல்லவா திருப்பித் தர வேண்டி வரும்! அரசிடம் ஏது அவ்வளவு பணம்!

Oil Pool என்றால் என்னவென்பதை உங்களுக்கு ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். பொதுத்துறை எண்ணெய் நிறுவனங்கள் அடைந்த லாபத்தின் ஒரு பகுதியை சேமிப்பாக Oil Pool account-இல் வைத்திருந்த அரசாங்கம் அதைக் கூசாமல் எடுத்துச் செலவு செய்துவிட்டதால் இந்தப் பொதுத்துறை நிறுவனங்களின் பாடு பேஜாராகி விட்டது.

இருபத்தாறாயிரம் கோடியைத் திருப்பித் தர வேண்டும் என்று இடதுசாரியினர் சொல்வது நியாயமாய் இருக்கலாம். ஆனால் நடைமுறை சாத்தியமல்ல. இப்போது 'Oil Poolல் உள்ள பற்றாக்குறையை முடக்கி விடுங்கள்' என்பது இடதுசாரிகளின் மற்றொரு யோசனை. முடக்குதல் என்றால்...?

**ச**ற்று விரிவாக விளக்குகிறேன். இறக்குமதி செய்யும் விலை + சுத்திகரிப்புச் செலவு ஆகிய இரண்டும் சேர்ந்த அடக்கவிலை ஒன்று பெட்ரோல், டீசல், மண்ணெண்ணெய் ஆகியவற்றுக்கு உண்டு அல்லவா...? அந்த அடக்க விலையைக் காட்டிலும் குறைவாகவே நம் நாட்டில் பெட்ரோலியப் பொருட்கள் விற்கப்படுகின்றன. எண்ணெய் நிறுவனங்கள் இதனால் அடையக்கூடிய நஷ்டத்தை அரசு நன்றாக அறியும். ஆனால் அந்தப் பற்றாக்குறையை அரசு ஈடுகட்ட வேண்டுமானால் பெட்ரோலியப் பொருட்களின் விலையை உயர்த்த வேண்டும். இல்லையென்றால் இந்தப் பற்றாக்குறை காரணமாக இந்த எண்ணெய் நிறுவனங்கள் பணம் இல்லாமல் சிரமப்படுகின்றன. வங்கிகளிடமிருந்து கடன் வாங்குகின்றன. இந்தப் பற்றாக்குறை சுமார் முப்பது கோடி ரூபாய் வரை தினந் தோறும் ஏறுகிறது.

கம்யூனிஸ்டுகளின் யோசனை என்னவென்றால், 'ஏற்கெனவே உள்ள பழைய பாக்கி கடன்களை மறந்து விடுங்கள். 'இன்று புதிதாய்ப் பிறந்தோம்' என்பது போல் கணக்குப் போட்டு இறக்குமதி விலைக்கும் விற்பனை விலைக்கும் இடையேயான வித்தியாசத்தை Oil Pool கணக்கில் செலுத்துங்கள், போதும். அப்போது பெட்ரோல் விலையை மிக அதிகமாய் உயர்த்த அவசியம் இருக்காது.'

இந்த யோசனையில் ஒரு மிகப் பெரிய அபாயம் உள்ளடங்கியிருக்கிறது. ஓஎன்ஜிஸி முதலான எண்ணெய் நிறுவனங்களுக்கு அரசு தர வேண்டிய பழைய கடன் பாக்கியையெல்லாம் தள்ளுபடி செய்துவிட்டால் அவற்றின் கதி என்னாவது? வருடக் கணக்கான உழைப்பும் முனைப்பும் அந்த நிறுவனங்களுக்கு உலகச் சந்தையில் நல்ல பெயர் பெற்றுத் தந்துள்ளன. ஆத்திர அவசரத்துக்கு அவற்றின் லாபத்தைச் சுரண்டி சாப்பிட்டுவிட்டு அம்போ என்று கை கழுவிவிட்டால் அந்த நல்ல பெயரெல்லாம் 'ரிப்பேரா'கிப் போகும்!

கணக்கை முடக்கப் போக கம்பெனிகளே அல்லவா முடங்கிப் போகும்!

நிலைமையைச் சமாளிக்க ஒரே வழி பெட்ரோல், டீசல், மண்ணெண்ணெய் விலைகளை உயர்த்துவதுதான்.

ஒவ்வொரு இந்தியனும் மூச்சைப் பிடித்துக் கொண்டு ஒருமுறை 'வந்தே மாதரம்' என்று முழங்கிவிட்டு விலை உயர்வுக்குத் தயாராக வேண்டியதுதான்.

- வி. கோபாலன்






●● இந்த வருடம் நான் எழுதிவரும் "அனுபவம் பேசுகிறது" என்ற நிர்வாக வியல் நூலுக்கு ஆதாரம் திரட்ட, திரு. கி.வா. ஜகந்நாதன் தொகுத்துள்ள "தமிழ்ப் பழமொழிகள்" புத்தகம் தேவை. விலைக்கோ அல்லது இரவலாகவோ தர விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

*– நல்லிகுப்புசாமி செட்டி,*
*9, நாகேஸ்வரன் சாலை,*
*தி. நகர், சென்னை – 600 017.*

●● பூஜைக்குரிய ஸ்ரீலக்ஷ்மி நாராயண சாளக் கிராமம், ஹயக்ரீவ சாளக்கிராமம்; அநிருத்த சாளக்கிராமம் ஆகியவற்றை விலைக்கு வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

*– வி. ராமச்சந்திரன்,*
*5, சிதம்பரநாதன் லே-அவுட்,*
*கல்யாண் தியேட்டர் பின்புறம்,*
*விழுப்புரம்.*

●● ஸ்ரீ வைஷ்ணவத்தின் அரிய கோட்பாடு களை பதினெட்டே மாதங்களில் எளிய முறை யில் கற்கலாம்.

*– ஏ. கிருஷ்ணமாச்சாரி,*
*208, கீழ உத்தர வீதி,*
*ஸ்ரீரங்கம் – 620 006.*

●● சிறந்த விளையாட்டு வீரர்களை உருவாக்கு வதையே லட்சியமாகக் கொண்டது விருதுநகர் அத்லெடிக் கிளப். தமிழகத்தில் எங்கு அத்லெ டிக் போட்டிகள் நடந்தாலும் தகவல் தெரிவிக் கவும். இளைஞர்கள் எங்களிடம் தொடர்பு கொண்டு இலவசமாக போட்டி விவரங்கள் அறியலாம்.

*– எம். எஸ். மணிமாறன்,*
*31, மொன்னி தெரு,*
*விருதுநகர் – 626 001.*

●● வியாசரின் மகாபாரதம் மூலமும், தமிழ்/ ஆங்கில உரையும் விலைக்குத் தேவை.

*– கே. பார்த்தசாரதி,*
*B-11, சுபம் ஃபிளாட்ஸ்,*
*4, படேல் தெரு, சென்னை – 33.*

●● பத்து, பன்னிரண்டாம் வகுப்புகளை முடித்தபின் மேற்கொண்டு என்ன படிக்கலாம் என்ற ஆலோசனைக்குத் தொடர்பு கொள்ள லாம்.

*– த. ரவிச்சந்திரன்,*
*34 D, ப.அ. தெரு,*
*அரவை – 639 201.*

●● 1961 முதல் 76 வரை "டைம்" அமெரிக்க வார இதழ்கள் உள்ளன. விலைக்கு வாங்க விரும்புவோர் தொடர்பு கொள்க.

*– ஜி. எஸ். திருமலை,*
*3, திலக் தெரு, தி. நகர்,*
*சென்னை – 600 017.*

●● பாரதத்தின் பொருளாதார மேம்பாட் டில், கம்ப்யூட்டர் துறையின் வளர்ச்சி நிலை குறித்த ஆய்வுகளில் ஆர்வம் கொண்ட இளை ஞனாகிய எனக்கு, தொழில்முறை முற்போக்கு சிந்தனையுள்ளவர்கள் நேசத்தோடு எழுதுங்கள்.

*– சிவ. பா. சச்சிதானந்தர்,*
*23, கெம் பஞ்ச தெரு,*
*காரமடை – 641 104.*

●● மழை வேண்டி கோயில்களில் மக்களைக் கூட்டி வாசிப்பதற்கு, "விராடபருவம்" புத்தகம் தேவை. உபயமாகவோ விலைக்கோ அனுப்ப முகவரி :

*– ஆர். ராம்மோகன்,*
*என். மேட்டுப்பட்டி,*
*தென்மேனி (அ) 626 202.*

●● டி.கே. பட்டம்மாள் பாடிய "எப்படிப் பாடினரோ" கிராமஃபோன் ரிகார்ட் அல்லது கேசட் வைத்திருப்பவர்கள் பிரதி எடுத்துக் கொடுத்து உதவினால் செலவு ஏற்கிறேன்.

*– க. மாரியப்பன்,*
*368, அழகேசன் சாலை,*
*ஸாயி பாபா மிஷன் (அ),*
*கோவை – 641 011.*

●● புகைப்படக் கலையை இலவசமாகக் கற் றுக் கொடுத்து, சுயதொழில் செய்ய உதவு கிறேன்.

*– ஆர். சிவனேசன்,*
*1/32, மேல உளூர்,*
*614 904. தஞ்சை (மாவ).*

(பாலம் பகுதி மூலம் தொடர்பு கொள் ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக் குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. – ஆர்.)



# ஒரு இலட்சிய நெடும்பாதையில் வெற்றிமுகம் நோக்கி............



- சுற்றுப்புறச் சூழல் பாதிக்காத வண்ணம் பொதுமக்கள் ஈடுபாட்டுடன் குப்பையை அகற்றும் புதிய முறை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.
- குப்பையிலிருந்து எரிசக்தி - இயற்கை வாயு - எரு தயாரித்தல் ஆகிய திட்டத்தைச் செயல்புடுத்த தீவிர நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.
- தமிழ்ப் புத்தாண்டு முதல் 15 நாட்களில் கட்டிட அனுமதி வழங்கப்பட்டு வருகிறது.
- தாய் சேய் நலம் காக்க 93 நலவாழ்வு நிலையங்கள் செயல்பட்டு வருகின்றன.
- 24 மணி நேரமும் பெண் மருத்துவர்களின் கவனிப்புடன் இயங்கும் 8 நலவாழ்வு நிலையங்கள்.
- மகளிர் சிறப்பு சிகிச்சைப் பிரிவு (Gynaecology Ward) சைதாப்பேட்டை நலவாழ்வு நிலையத்தில் செயல்படுகிறது.
- தீவிரப் போலியோ தடுப்பு முயற்சிகள் மேற்கொண்டதன் பலனாக, கடந்த ஆண்டு சென்னை மாநகரில் ஒரு குழந்தைகூட போலியோ நோயால் பாதிக்கப்படவில்லை.
- பராமரிக்கப்பட்டு வரும் தெரு விளக்குகளின் எண்ணிக்கை 91,597.
- ரூ. 346 இலட்சம் செலவில் உயர்கோபுர மின் விளக்குகள் - சோடியம் வேப்பர் விளக்குகள் - புதிதாகத் தெரு விளக்குகள் - நடமாடும் உயர் கோபுர விளக்குகள் செயல்படுத்தப்பட்டுள்ளன.
- ரூ. 10.26 கோடி செலவில் 194 சாலைகள் சீரமைக்கப்பட்டுள்ளன.

- நடப்பு நிதியாண்டில் ரூ. 21 கோடி செலவில் 229 பேருந்துச் சாலைகள் புதுப்பிக்கப்பட உள்ளன.
- ரூ. 20 கோடி செலவில் 65 கி.மீ. நீளத்திற்கு புதிய மழைநீர் வடிகால் கால்வாய் கட்டப்பட உள்ளது.
- ரூ. 30 கோடி செலவில் 6 பாலங்கள் கட்டப்பட உள்ளன.
- பிறப்பு-இறப்பு சான்றிதழ் 24 மணி நேரத்தில் வழங்க வகை செய்யப்பட்டுள்ளது.
- அறிவியல் முறையில் நோய் கண்டறியக் கூடிய நவீன ஆய்வகத்தில், பரிசோதனைகள் அனைத்திற்கும் தனியார் சோதனைக்கூடங்களில் ஆகும் செலவில் 50 சதவிகித கட்டண சலுகை அளிக்கப்படுகிறது.
- நடப்பு ஆண்டில் மண்டலத்திற்கு ஒரு பள்ளி வீதம் மழலையர் பள்ளி தொடங்கப்பட்டுள்ளது.
- மேல்நிலைப் பள்ளிகள் அனைத்திலும் கணிப்பொறிப் பாடம் படிக்க வசதி.
- +2 வகுப்பில் மாநில அளவில் 8 பாடங்களில் மாநகராட்சிப் பள்ளி மாணவ மாணவியர் முதல் இடம்.
- மாநகராட்சிப் பள்ளிகளில் +2 வகுப்பில் அதிக மதிப்பெண் பெற்ற முதல் 10 மாணவர்களுக்கு மேல்படிப்பு ஊக்கத் தொகை வழங்கப்படுகிறது.








## சென்னை மாநகராட்சி

DIPR / 503 / DIS / 97

# வெளிச்சத்தின் விலாசம்

## 12

அந்த நாளில் அகஸ்வேர் என்கிற மன்னர் இந்தியா தொடங்கி எத்தியோப்பியா வரை நூற்றி இருபத்தி ஏழு மாநிலங்களை ஆண்டுவந்தார். இவரது தலைநகரம் சூசான். தமது ஆட்சியின் பெருமைகளைக் குறுநில மன்னர்கள் முதல் குடிமக்கள் வரை அறிந்துகொள்ளவேண்டுமென்று அவர் ஆசைப்பட்டார். ஆகவே தமது தலைநகரத்தைச் சொர்க்கத்தைப் போல அலங்கரித்தார். அவரது அரண்மனை முற்றத்தைப் பார்ப்பதற்கு ஆளுக்கு ஆயிரம் கண்கள் வேண்டும். நூற்றி எண்பத்தாறு நாட்கள் இடைவிடாது எல்லோருக்கும் விருந்தளித்தார். திராட்சை மது தெருவெல்லாம் ஓடியது. அரசர் அகஸ்வேரும் மதிமயங்கக் குடித்தார். அவரது மனைவியும், அரசியுமான வஸ்தியின் நினைவு அவருக்கு வந்தது. பேரழகுப் பெட்டகமான வஸ்தியை ஆளுனர்களும், பொதுமக்களும் பார்த்தால் அவளை மனைவியாகப் பெற்ற மன்னனான தன்னைத்தானே எல்லோரும் புகழுவார்கள் என்று நினைத்தார். தமது தூதுவர்களை அனுப்பி வஸ்தியை அரண்மனை முற்றத்திற்கு வரும்படிக் கேட்டுக் கொண்டார். கற்பகக் கனியான தன்னைக் காய்ந்த திராட்சையைப் போல நடத்துகிறார் அரசர் என்பதில் அரசியான வஸ்தி ஆத்திரம் கொண்டார். பேரரசியான தன்னைப் பொதுமக்கள் முன்னிலையில் நினைத்த நேரத்தில் வா என்றால் வர முடியாது என்று வந்த தூதுவர்களிடம் அழுத்தம் திருத்தமாகச் சொல்லி விட்டாள். அகஸ்வேர், வஸ்தியைத் தனது மனைவி என்று நினைத்தார். வஸ்தியோ தான் பேரழகி என்று நினைத்தாள். அரசனின் மனைவியாக இருப்பதால்தான் தான் அரசி என்பது அவளுக்கு விளங்கவில்லை.

தன் கட்டளைக்குப் பணியாத வஸ்தியை நிமிட நேரத்தில் நிர்க்கதியாக்கி விடவேண்டுமென்று அகஸ்வேர் நினைத்தார். என்றாலும் ஒப்புக்காக ஆளுனர்களைக் கலந்து ஆலோசித்தார். அவர்களோ உரிந்துபோன தோலில் உப்பு மஞ்சள் தேய்க்கிறவர்கள். அரசரின் கட்டளைக்கு அவரது மனைவி அடிபணியவில்லை என்பதை நாட்டு மக்கள் அறிந்து கொண்டால், இனி எந்த மனைவியும் தம் கணவனைக் கால் தூசிக்குக் கூட மதிக்கமாட்டாள் என்று அரசனது கோபத் தீயில் காய்ந்த விறகைக் கட்டுக்கட்டாக இறக்கினார்கள். அரசர் அகஸ்வேர் ஒரே வரியில், "இந்த நிமிடம் முதல் வஸ்தி எனது முன்னால் வரக் கூடாது" என்று உத்தரவிட்டார்.

"உலகத்தில் முதலாளிகள் எல்லோரும் ஒருநாள் இல்லாது



சக்தி-

போவார்கள்; அப்போதும் கணவர்கள் இருப்பார்கள்" என்றபடி நாடு முழுவதும் மனைவிமார்கள் அடக்கப்பட்டு விட்டார்கள் என்பதில் மாப்பிள்ளைமார்கள் மகிழ்ந்தார்கள். அரசன் தன்னிடமிருந்து வெளிப்பட்ட ஆணைக்குத் தானே கட்டுப்பட்ட காலம் அது. ஆகவே வஸ்தியின் கள்ளத்தை வருடவும் முடியவில்லை; இவள் தான் என் அரசி என்று சிம்மாசனத்தில் அவளை அமர்த்தி அவரால் பெருமைப் படவும் முடியவில்லை.

அந்த நாட்டு வழக்கப்படி அகஸ்வேரின் எல்லைக்குட்பட்ட பரந்து விரிந்த தேசத்தில் அரசனுக்கேற்ற அரசி ஒருத்தியைத் தேடி அரண்மனைக் காவலர்கள் பறந்தார்கள். அந்தப்புரத்திற்கு ஆயிரக் கணக்கான கன்னிப் பெண்கள் கொண்டு வரப்பட்டார்கள். அரசர் தங்களை ஏற்பாரா மாட்டாரா என்று நாளும் பொழுதும் அவர்கள் நம்பிக்கைகளையே சுவாசித்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் கன்னிப் பெண்கள் அனைவரும் ஆறு மாதங்கள் வெள்ளைப் போளத் தைலத்தில் குளிப்பாட்டப்பட்டார்கள். மறு ஆறு மாதங்கள் நறுமணப் பொருட்களாலும், வாசனைத் திரவியங்களாலும்

# கி.மு. 2000

வலம்புரி ஜான்

சிராட்டப்பட்டார்கள்.

சூசான் அரண்மனையில் மொர்த்தக்காய் என்னும் பெயர் கொண்ட யூதர் ஒருவர் இருந்தார். இவர் தமது சித்தப்பாவின் மகளான எஸ்தர் என்பவளை வளர்த்து வந்தார். இவளோ பிரம்மனையே பெருமூச்சு விட வைக்கும் பேரழகி. ஒரு வருடமாக அரண்மனை அந்தப்புரத்தில் வளர்க்கப்பட்ட ஆயிரக்கணக்கான கன்னிப் பெண்களில் இவள் ஒருத்தி. வாத்துக்களின் கூட்டத்தில் வண்ணமயிலாகத் தென்பட்டவள் இவள்.

## அருள்வாக்கு



நாம் கஷ்ட நிவிருத்திக்காக ஸ்வாமியிடம் போனாலும் சரி, அல்லது சௌக்கியமாக இருக்கிறோம் என்று நன்றி காட்டப் போனாலும் சரி, அவரை நினைக்கிற பழக்கம் வலுக்க வலுக்கத் தானாகவே இந்தக் கஷ்டம் - சௌக்கியம் ஆகியவற்றைப் பற்றியே நினைப்பதிலிருந்து நம் மனம் விடுபடும். அவர் எப்படி நடத்துகிறாரோ

ஒரு வருடமானபோது ஒவ்வொரு இளமங்கையும் அரசரின் முன்னால் அழைத்துச் செல்லப்படும் நாள் வந்தது. அந்த அழகிகளின் அணிவகுப்பில் அரசரின் கண்கள் எஸ்தரின் மீது மையம் கொண்டன. அவளைப் பார்த்த மாத்திரத்திலேயே அரசர் அவளிடம் உள்ளத்தைப் பறிகொடுத்தார். எஸ்தரை அரசி என்று அறிவிப்பதற்கு அரசருக்கு அதிக நேரம் ஆகவில்லை. எஸ்தர் அரசியானதை முன்னிட்டு அரசர், குறுநில மன்னர்களுக்கும், அரசாங்க அலுவலர்களுக்கும் விருந்தளித்தார். எஸ்தர் அரசியாக முடிசூட்டப்பட்டதன் நினைவாக அரசியல் கைதிகள் பலருக்கும் மன்னிப்பு வழங்கப்பட்டது.

எஸ்தர் யூத இனத்தைச் சார்ந்தவள் என்பதை ஒருவரிடமும் சொல்ல வேண்டாம் என்று மொர்த்தக்காய் ஏற்கெனவே அவளிடம் சொல்லியிருந்தார். அதன்படியே எஸ்தர் நடந்து வந்தாள்.

மொர்த்தக்காய் அரண்மனை வாயிலில் பணியாற்றிய நாட்களில் பிகதான், தெரேக என்ற இருவர் அரசரைத் தாக்குவதற்கு வகை தேடினர். இவர்களது சதித்திட்டத்தை மொர்த்தக்காய் எஸ்தர் வழியாக அரசருக்கு அறிவித்தார். அரசர் அந்தச் சதிகாரர்களைத் தூக்கிலிட்டார். இந்நிகழ்ச்சி அரசரின் முன்னிலையிலேயே குறிப்பேட்டில் எழுதி வைக்கப்பட்டது.

இந் நிகழ்ச்சிக்குப்பின் அரசர் தம் பாதுகாப்புக் கருதி ஆமான் என்பவனை உயர் அதிகாரியாக நியமித்தார். ஆமானிடத்தில் அனைத்து ஊழியர்களும் அச்சத்தோடு நடந்து கொண்டார்கள். போகும்போதும் வரும்போதும் அந்த ஊழியர்கள் ஆமானை முழங்காலில் நின்று வணங்கினார்கள். ஆனால் மொர்த்தக்காய் மாத்திரம் தன் முன் மண்டியிட்டு வணங்காதது ஆமானுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. இதற்கிடையில் மொர்த்தக்காய் யூத இனத்தைச் சேர்ந்தவர் என்பதை ஆமான் அறிந்து கொண்டான். யூத இனத்தைச் சார்ந்தவர்கள் தங்களை உயர்ந்தவர்கள் என்று அவர்களாகவே கருதிக் கொள்கிறார்கள் என்கிற எண்ணம் ஆமானுக்கு வலுப்பட்டது. மொர்த்தக்காயைப் பழிவாங்க தகுந்த வழி அவரது இனத்தையே அழிப்பதுதான் என்கிற முடிவிற்கு ஆமான் வந்தான்.

தனது படுபாதகமான திட்டத்தை நிறைவேற்ற நேரம் பார்த்திருந்தான் ஆமான். அரசரை ஒருநாள் சந்தித்தான். "அரசே! உங்களது நியமங்களையும், சட்டங்களையும் பின்பற்றாத மக்கள் உங்கள் அரசாட்சியில் பெருகி வருகிறார்கள். மற்ற மக்களும் அவர்களது நியமங்களையும், வழிபாட்டு முறைகளையும் பின்பற்றத் தொடங்கியிருக்கிறார்கள் என்று அறிய வருகிறேன். இந்தச் சவால் மாபெரும் கலவரமாக உங்களுக்கு எதிராக வெடிப்பதற்கு முன்பாக, அவர்களை அழித்து விடுவதுதான் அரச தர்மம்" என்றான். கலக்கமடைந்த மன்னர், ஆமானின் மீதுள்ள மதிப்பு காரணமாக அவன் விரும்பியபடியே 'வயலில் களைகளை அகற்றுவது தவறல்ல' என்று சொல்லி விட்டார்.

அரச கட்டளையை செயல்படுத்துவதில் ஆமான் அவசரப்பட்டான். உடனே அரச எழுத்தர்களை வரவழைத்தான். அதார் என்ற பன்னிரெண்டாம் மாதத்தின், பதின்மூன்றாம் நாளன்று, ஒரே நாளில் சிறுவர் முதல் பெரியோர் வரை குழந்தைகள், பெண்கள் உட்பட தேசம் முழுவதிலும் உள்ள யூதர்களைக் கொன்று விடலாம் என்கிற அரச உத்தரவை குதிரை வீரர்கள் எல்லா மாநிலங்களுக்கும் கொண்டு சென்றார்கள். யூதர்கள் தங்களுக்கு நேர இருந்த பாதகத்தை நினைத்து நடுக்கமுற்றனர். குழந்தை குட்டிகளெல்லாம் தங்கள் மீது திணிக்கப்பட இருக்கிற மரணத்தை நினைத்து ஓலமிட்டார்கள். ஆமான் தனது திட்டம் நிறைவேறப் போகிறது என்று மகிழ்ச்சியடைந்தான்.

மொர்த்தக்காய் அரண்மனைக்கு அப்பால் சென்று தமது ஆடைகளைக் கிழித்துக் கொண்டு, உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக் கொண்டு, வீர்விருக்கும் பேரபாயத்தி

அப்படி நடத்தி வைக்கட்டும் என்று பாரத்தை அவரிடமே தள்ளிவிட்டு விச்ராந்தியாக இருக்கிற மனோபாவம் உண்டாகும். ஏதோ ஓர் ஆனந்தமும் சாந்தமும் மனசில் படரத் தொடங்கும். இதுவே நம்மை அமர நிலையில் சேர்ப்பது; ஓயாமல் குறையுள்ள நாம் மாறாத நிறைவாக நிறைவதற்கு வழி செய்வது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

விருந்து தமது யூத இனத்து மக்களைக் காத்தருளும்படி கர்த்தரிடம் வேண்டினார். பணிப் பெண்கள் வழியாகத் தமது இனத்தாருக்கு நடக்க இருக்கிறவைகளை எஸ்தர் அரசி அறிந்து கொண்டாள். மொர்த்தக்காய் அணிந்து கொள்ளும்படியான புதிய ஆடைகளை எஸ்தர் அனுப்பினாள். அவரோ அதை ஏற்கவில்லை. தனது இனத்து மக்களுக்கு வரவிருக்கிற மரண அபாயத்தைக் குறித்து அரசரிடம் பேசி அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று எஸ்தருக்கு மொர்த்தக்காய் செய்தி அனுப்பினார். செய்தி கொண்டு வந்தவர் சொன்ன செய்திகளால் அரசி அதிக கவலைக்கு ஆளானாள். தமது படுக்கையைக் கண்ணீரால் நனைத்தாள். அரசியின் ஆடைகளைக் களைந்துவிட்டு, தலைவிரிகோலமாக, கண்ணீரும் கம்பலையுமாய் தனது மக்களைக் காப்பாற்றுமாறு கர்த்தரிடம் வேண்டினாள்.

அரசர் அழைக்காமல் அவரது உள்முற்றத்திற்கு அரசியே ஆனாலும் செல்ல இயலாது. அவ்வாறு செல்லுவோர் எவரெனினும் அவர்கள் உயிரை இழப்பது உறுதி. ஆகவே எஸ்தர் உயிருக்கு அஞ்சினாள். இதை அறிந்த மொர்த்தக்காய் 'உன் இனம் முழுவதும் பூண்டற்று அழிகிறபோது, நீ மாத்திரம் அரண்மனைக்குள் பாதுகாப்பாக இருக்கலாம் என்று நினைக்கிறாயா? நீ மௌனமாக இருந்தால் யூதர்களுக்கு விடுதலையும், பாதுகாப்பும் வேறொரு இடத்திலிருந்து வரும். யூதர்கள் அனைவரும் பாதுகாக்கப்படும்போது, நீயும் உன் தந்தை வீட்டாரும் மாண்டு மடிந்து போகலாம். என்ன நடக்குமென்று யார் அறிவார்கள்? ஒருவேளை தன் இனத்து மக்களின் அழிவைத் தன் கண்களாலேயே பார்ப்பதற்குத் தான் அரசியாக ஆகியிருக்கிறாயோ?" என்று எஸ்தருக்குச் செய்தி அனுப்பினார்.

இந்தச் செய்தி எஸ்தரிடத்தில் பெருத்த மாற்றத்தை உருவாக்கியது. "சூசான் நகரத்தில் காணப்படும் அனைத்து யூதர்களும் ஒன்று சேர்ந்து உபவாசமிருந்து மூன்று நாட்கள் ஜெபம் செய்வார்களாக! நாலாவது நாள் காலை நான் மன்னருக்கு முன்பாகச் செல்லுவேன். சட்டத்திற்குப் புறம்பாக இருந்தாலும் என் இனத்து மக்களுக்காகச் செல்லுவேன்" என்று எஸ்தர் மொர்த்தக்காய்க்கு செய்தி அனுப்பினாள். அவ்வாறே அவர்கள் ஜெபத்திலும், தவத்திலும் மூன்று நாட்களைக் கழித்தனர்.

**நா**லாவது நாள் எஸ்தர், அரசிக்குரிய ஆடைகளை அணிந்து அரச மண்டபத்தில் அரசரின் அரியணைக்கு எதிரே உள்முற்றத்தில் வந்து நின்றாள். அவளது இதயம் பல முறை நின்று நின்று போகலாமா வேண்டாமா என்று கேட்டுக் கொண்டு போனது. எதிர் பாராதவிதமாக அரசர் தமது செங்கோலை நீட்டினார். எஸ்தர் அருகில் சென்று செங்கோலின் நுனியைத் தொட்டாள். "எஸ்தர் அரசியே! உனக்கு என்ன வேண்டும்? நீ விரும்பினால் என் அரசின் பாதியை நீ எடுத்துக் கொள்ளலாம்" என்றார். அதற்கு எஸ்தர் "மன்னர் விரும்பினால், தாங்களும் ஆமானும் இன்று நான் அளிக்கப்போகும் விருந்தில் கலந்து கொள்ள வர வேண்டும்" என்றாள்.

அவளது வேண்டுகோளின்படியே அரசரும், ஆமானும் எஸ்தர் அளித்த விருந்தில் கலந்து கொண்டார்கள். அப்போதும் அரசர், "எஸ்தர்! நீ எதைக் கேட்டாலும் தருவேன்; கேள்" என்றார். எஸ்தர் பவ்வியமாக, "நாளையும் ஒரு விருந்திற்கு ஏற்பாடு செய்கிறேன்; அதற்கு அரசரும் ஆமானும் வரவேண்டும்; அப்போது எனது விண்ணப்பத்தை எடுத்து வைப்பேன்" என்றாள். "உன் விருப்பப்படியே ஆகட்டும்" என்றார் மன்னர்.

இரண்டாவது முறையாக விருந்துக்கு, அதிலும் அரசியின் விருந்துக்கு அழைக்கப்பட்டதில் ஆமான் ஆளே மாறிப் போனான். இப்போதெல்லாம் நான் அரசருக்குச் சமமாகவே நடத்தப்படுகிறேன் என்று தனது நண்பர்களிடத்திலெல்லாம் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தான். பெருமை பிடிபடவில்லை; அவனது கால்களும் தரையைத் தொடுவதாக இல்லை. அன்றும் அரண்மனை வாயிலைக் கடந்தபோது எல்லோரும் எழுந்து மண்டியிட்டு வணங்கினர். மொர்த்தக்காய் மாத்திரம் ஆமானை ஒரு பூச்சியைப் போல நடத்தினார். இருந்த இடத்திலிருந்து எழுந்திருக்கவே இல்லை. ஏறத்தாழ அரசனாகவே ஆகிவிட்டது கூட ஆமானுக்குப் பெரிதாகப் படவில்லை. கருடனாகிவிட்ட பிறகும், கம்பளிப்பூச்சி தன்னை மதிக்கவில்லையே என்பதுதான் ஆமானை வாட்டி வதைத்தது. தனது நண்பர்களைக் கலந்தான். அவர்களோ ஒரு வாய்ப்பட "ஐம்பது முழ உயரத்திற்குத் தூக்கு மரம் ஒன்றைச் செய்து, அதில் மொர்த்தக்கா



''திருடனா இருந்தாலும் ரொம்ப யோசனை யான ஆளுடா அவன்!''

''எப்படிச் சொல்ற?''

''பிட் துணியா திருடினா தையக்கூலி தரணும்னு எப்பவுமே ரெடிமேடாத்தான் திருடுவான்னா, பார்த்துக்கோயேன்!''

– பூங்கோதை கிருஷ்ணராஜ்

---

யைத் தூக்கிலிட்டுவிட்டுத்தான் நீ அரசரோடு விருந்துண்ணப் போகவேண்டும்'' என்றனர். ஆமான், தான் சொன்னால் மன்னர் தட்ட மாட்டார் என்று நம்பி தூக்கு மரம் செய்வதற்கு உத்தரவிட்டான்.

அன்றிரவு மன்னருக்குத் தூக்கம் வரவில்லை. ஆகவே அரண்மனை ஊழியர்களை அழைத்து குறிப்பேடுகளைப் படிக்கச் சொன்னார். அவ்வாறு படித்தபோது மொர்த்தக்காய் எவ்வாறு சதிகாரர்களிடமிருந்து அரசருடைய உயிரைக் காப்பாற்றினார் என்கிற குறிப்பும் படிக்கப்பட்டது. காலையானதும், மொர்த்தக்காயின் கதையை முடிப்பதற்காக ஆமான் அரசரிடம் பேச்சுக் கொடுத்தான். அரசரோ, ''மன்னர் மரியாதை செய்யவேண்டும் என்று நினைக்கிறவருக்கு என்னென்ன செய்யவேண்டும்?'' என்று ஆமானிடம் கேட்டார். தன்னை மரியாதை செய்யத்தான் அரசர் கேட்கிறார் என்று நினைத்த ஆமான், ''அரசனது உடைகளை அணிவித்து, தலையில் கிரீடம் வைத்து, குதிரையில் அமர்த்தி, பரிவாரங்கள் புடைசூழ மன்னரின் மரியாதைக்குரியவரை ஊர்வலமாக அழைத்துப் பெருமைப்படுத்த வேண்டும்'' என்றான்.

உடனே அரசர், ''அப்படியெனில் அரண்மனை வாயிலில் வேலையாயிருக்கும் மொர்த்தக்காய் என்கிற யூதருக்கு நீ சொன்னவண்ணமான மரியாதையை உடனே செய்'' என்றார். அரசரின் ஆணையின்படியே ஆமான் நடக்க வேண்டியதாயிற்று. ஆமான் தலைக்கு முக்காடிட்டுக் கொண்டு திரும்பினான்.

இரண்டாவது நாள் விருந்திற்கான நேரம் வந்தது. திராட்சை ரசத்தை அருந்தும்போதே அரசர் எஸ்தரை நோக்கி, ''உன் வேண்டுகோள் என்ன?'' என்று கேட்டார். ஆமானும் அப்போது உடன் இருந்தான். ''அரசே! நானும் எனது மக்களும் கொல்லப்பட இருக்கிறோம்; எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்று எஸ்தர் அரசி அழுது புலம்பினாள். அவள் யூத இனத்தைச் சார்ந்தவள் என்று அறிந்த பிறகும் அவளது கடைக்கண் பார்வைக்காக மன்னர் காத்திருப்பது ஆமானுக்கு அதிர்ச்சியாக இருந்தது. யாரோ சில வேற்று மனிதர்கள் வேரறுக்கப்படப் போகிறார்கள் என்றுதான் அரசர் நினைத்திருந்தார்; யூதர்கள் கொல்லப்படப்போகிறார்கள் என்பதை இந்த நிமிடம் வரை அவர் அறிந்திருக்கவில்லை. ஆகவே, ''உன்னையும், உன் இனத்தாரையும் அழிப்பதற்காகத் திட்டம் வகுத்த அந்தக் கொடியவன் யார்?'' என்று அரசர் கேட்டார். உடனே எஸ்தர் 'இவன்தான்' என்று ஆமானைச் சுட்டிக்காட்டினாள். அரசருக்கு அடக்கமுடியாத ஆத்திரம் உண்டாயிற்று. கோபமாக அரண்மனைத் தோட்டத்திற்குள் அவர் புகுந்தார்.

தனது திட்டம் தவிடுபொடியானதையும், தனது உயிருக்கே ஆபத்து உருவாகி இருப்பதையும் அறிந்து கொண்ட ஆமான் தனிமையிலிருந்த எஸ்தரிடம் தன்னைக் காப்பாற்றும்படி வேண்டினான். மது மயக்கத்தில் எஸ்தரின் கட்டிலில் விழுந்து கிடந்தான். திரும்பி வந்த அரசர், ''எனது அரண்மனையில் எனது அரசியையே கற்பழிக்க முயன்ற கிராதகன் இவன்'' என்று குற்றம்சாட்டினார். ஆகவே அப்போதே, ஆமான் மொர்த்தக்காய்க்காகச் செய்த தூக்கு மரத்தில் தொங்க விடப்பட்டான். அரசர் ஆமானின் இல்லத்தை எஸ்தருக்கு வழங்கினார். எஸ்தரோ, மொர்த்தக்காய்க்கும் தனக்கும் உள்ள உறவை அரசருக்கு உணர்த்தினார். ஆமானின் நிலைக்கு மொர்த்தக்காய் அன்றே உயர்த்தப்பட்டார்.

எஸ்தர் அரசி, அரசரின் பாதங்களைத் தனது கண்ணீரால் கழுவி கூந்தலால் துடைத்தாள். ''எனது யூத மக்களைக் கொல்லுவதற்காக நாள் குறிக்கப்பட்டு நாடு முழுவதும் தகவல் அனுப்பப் பெற்றுள்ளது. இந்த உத்தரவுகளை அரசர் திரும்பப் பெறவேண்டும்'' என்று எஸ்தர் அரசரை வேண்டினாள். அரசரது முத்திரை பொறித்த மடல்களைத் திரும்பப் பெற இயலாது. ஆதலால், அரசர் யூதர்களின் உயிர்களைக் காப்பாற்றுகிற அளவில் வேறு மடல்களை எழுத உத்தரவிட்டார். இவைகள் எஸ்தர் அரசியின் கவனிப்பில் விரைவாய்ச் சென்று சேர்ந்தன.

இதனால் யூதர்கள் பலம்பெற்று எதிரிகளை அழித்தனர். பேரழிவிலிருந்து காப்பாற்றப்பட்டனர். இந்த அரிய திருவிழாவை எப்படிக் கொண்டாட வேண்டும் என்று எஸ்தர் அரசி எழுதி வைத்தாள். இதுவே யூதர்கள் தலைமுறை தலைமுறையாகத் தவறாமல் கொண்டாடி வரும் பூரிம் திருவிழாவாகும்.

(தொடரும்)

மலரும் பயனடைகிறது என்பதை வரி செலுத்துவோர் உணர வேண்டாமா...!

● அ. சுகுமார், காட்டுக்கானூர்.

? உலகப் போர் சாவை விட போக்கு வரத்து சாவே இந்தியாவில் அதிகம் என்று ஒரு போலீஸ் அதிகாரி வருத்தம் தெரிவித்திருக்கிறாரே...?

! வருந்தினால் போதுமா...! என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறார்களாம்...? சென்னையில் குறைந்தபட்சம் மஞ்சள் கோட்டைத் தாண்டக் கூடாது என்பதையாவது கண்டிப்புடன் அமுல் படுத்தலாம். அப்புறம் அடுத்த கட்டத்துக்குப் போகலாம்.



• வீண் கோபம்!

# கோபப்படுகிறாரே வாஜ்பாய்?

● தேவந்தி துரைராஜ், திருப்பத்தூர் – 2.

? காங்கிரஸ் தலைவர் தேர்தலில் கேசரி வெற்றி பெற்றது அனுபவத்தினாலா? வயதினாலா?

! ஹிந்து கார்ட்டூன்படி நூறு சதவிகித வட்டி வாக்களித்ததால்!

● வி. சத்தியப்ரியன், சென்னை – 15.

? பூக்களிலிருந்து தேனை தேனீக்கள் உறிஞ்சுவது போல வருமான வரியை வசூலிக்க வேண்டும் என்று நிதியமைச்சர் ப. சிதம்பரம் கூறியுள்ளது பற்றி...?

! ராஜாஜி உவமை அது. பயன்படுத்துவதுடன் அதை நடைமுறைப்படுத்துவதும் முக்கியம். மக்களும் – குறிப்பாக வியாபாரம், சுயதொழில் செய்பவர்கள் – வரிகள் கணிசமாகக் குறைக்கப்பட்டிருப்பதை உணர்ந்து ஒத்துழைக்க வேண்டும். தேனை தேனீக்கு வழங்குவதால்





• 'மகா' பாரதம்!

• ராஜாஜி உவமை

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? 'இது ஒருநாள் கிரிக்கெட் போட்டி அல்ல... மகாபாரதம் போன்று தொடர் போராட்டம்' என்று திருநாவுக்கரசு கூறியுள்ளாரே...?

! நந்தனார் – கிந்தனார்

ராமாயணம் – கீமாயணம் போல





• தயார்! தயார்!

• இறக்குவது எப்படி?

பாரதம் – கிரதம் எழுதுகிறார் திருநாவுக்கரசு.

● கே. பெருமாள், கூனியூர்.

? தி.மு.க. – த.மா.கா. பிரியும் நிலை இருந்தால் கலைஞர் ஆட்சி கவிழுமா?

! கவிழாமல் இருக்கலாம். ஆனால் நீடிக்குமா என்பது மத்தியில் ஏற்படக்கூடிய மாற்றங்களைப் பொறுத்தது!

● கானா கணேசன், பொறையாறு.

? 'இனிமேல் கட்சி பலமாக இருக்கும்' என

*ஜெ கூறுகிறாரே?*

! ஆமாம், போயஸ் தோட்டத்துக்கு சசிகலா திரும்பி வந்து சேர்ந்துவிட்டார் அல்லவா!

● மு. இரவிச்சந்திரன், சேலம் – 9.

? *'இடங்குகளில் சேமித்து வைக்கவா ப்ருத்வி போன்ற ஏவுகணைகளைத் தயாரித்து வைக்கிறோம்...?' என்று வாஜ்பாய் கோபப்பட்டிருக்கிறாரே?*

! தாக்குதலுக்கும் தற்காப்புக்கும் வித்தியாசம் இல்லாதது போல் விஷய ஞானம் உள்ள வாஜ்பாய் போன்றவர்களே பேசுவது வருத்தமளிக்கிறது. அறிஞர்கள் கூட அரசியல் உணர்ச்சி வசப்படும்போது தடுமாறத்தான் செய்வார்கள் போலும்!

● ஜெ. சந்திரசேகரன், கல்லுக்குழி.

? *ஜெ. இல்லாத அ.தி.மு.க.வில் இணையத் தயார் என்கிறாரே ஆர்.எம்.வீ.?*

! திருநாவுக்கரசு அணியில் 'ஜெ' இல்லையே..!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? *பீஹார் முதல்வர் லல்லு பிரசாத் யாதவை பதவி விலக வைக்க நல்ல யோசனை சொல்லுங்களேன்?*

! அவர் மீது வழக்குத் தொடர ஆளுனர் அனுமதி அளித்த பிறகும் கூட, ராஜினாமா 'செய்ய மாட்டேன்' என்று பிடிவாதம் பிடிக்கும் லல்லுவுக்கு பீகார் எம்.எல்.ஏக்கள்தான் கல்தா கொடுக்க வேண்டும்! ஜனநாயக அரசியலின் சிறந்த மரபுகளை நினைவூட்ட, அவர்கள் இவ்வாறு செய்வது அவசியம். அவர்களையும் லல்லு விலைக்கு வாங்கியிருக்கிறார் எனில், மக்கள்தான் அவருக்குப் பாடம் புகட்ட முடியும்.

● ஊத்துக்குளி சுப்ரா, இராயப்பட்டி.

? *தேவே கௌடா ஸ்பெஷல் – தூக்கம்; ஐ.கே. குஜ்ரால் ஸ்பெஷல் என்ன...?*

! தேக்கம்!

● சி.கொ.தி. முருகேசன், கோபி.

? *திருநாவுக்கரசு வெற்றிக் கனியைப் பறிப்பாரா...?*

! நாடாளுமன்றத்தில் கனி, நீதிமன்றத்தில் காய், சட்டமன்றத்தில் பிஞ்சு!

● எம். கதீஜா ஹனீஃபா, திருச்சி – 6.

? *போலித்தனமான தேர்தல்கள் மூலம் பொறுப்புகளில் இருப்பதைவிட, ஒரு சாதாரண தொண்டனாக இருப்பது மரியாதைக்குரிய, பெருமைக்குரிய விஷயம் என்கிற அர்த்தத்தில் வாழப்பாடி பேசி, தங்கபாலுவைத் தாக்கியிருக்கிறாரே.. கவனித்தீரா?*

! சரிதான். போலித்தனமான தேர்தல்கள் மூலம் தேர்ந்தெடுக்கப்படுகிற தலைவர்களின் கீழ்தானே தொண்டராக இருக்க வேண்டி வரும்...! இதில் எங்கேயிருக்கிறது மரியாதை?

● ஏ. ஹஸன் முஹம்மத் அஸனப்பா, சேலம் – 5.

? *தில்லி திரைப்பட அரங்கு நிர்வாகத்தினர் முன்னெச்சரிக்கையுடன் செயல்படவில்லையே..?*

! அந்தத் திரையரங்கு மட்டுமல்ல, ஏஸி தியேட்டர்கள் பலவும் இன்று எமலோகத்தின் நுழைவாயிலாகத்தான் உள்ளன. மின் இணைப்புகள், இயக்கம், பாதுகாப்பு முன் ஏற்பாடுகள்... தீ விபத்து எனில் உடனே என்ன செய்ய வேண்டும் என்பதற்கான பயிற்சிகள் போன்றவற்றையெல்லாம் கவனிக்க வேண்டும். இதற்குச் சட்ட திட்டங்கள் இல்லாமல் இல்லை. அதிகாரிகளுக்குப் பொறுப்புகளும் உள்ளன. ஆனால் நடைமுறைப்படுத்துவதுதான் கிடையாது. மாமூல் வசூல் மட்டும் ஜரூராக நடக்கும்.

☐ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கே. பெருமாள்,
3/89 ஏ, சாலைத் தெரு,
கூனியூர் - 627 417.
நெல்லை மாவட்டம்.

கல்கி-பாலு ஜுவல்லர்ஸ்

# 'ஹனிமூன்' ஜோக்

## போட்டி - 9 முடிவு



''டார்லிங் ஹனிமூனுக்குப் போக வேண்டாம்னு சொல்றியே... ஏன்?''

''இங்க நாம இல்லாம உங்க அம்மா ரொம்ப ஜாலியா இருந்து தொலைப் பாங்களே...''

— நெல்லை குரலோன்



''தேன்நிலவுக்குப் போயிட்டு வந்த அரசியல்வாதியோட மகன் தன் அப்பாகிட்ட என்னத்த கேட்டு இப்படி அடம்பிடிச்சுக்கிட்டு இருக்கார்?''

''அவர் பார்த்து ரசிச்ச இடங்களையெல் லாம் வளைச்சுப் போட்டு வாங்கி தன் பேர்ல எழுதி வைக்கணுமாம்!''

– ஜி. செல்லத்துரை



''நம்ம பொண்ணு கில்லாடிங்க!''

''எப்படிச் சொல்ற?''

''ஹனிமூனுக்குப் போன இடத்துல மாப்பிள்ளை கூட பந்தயம் வெச்சு தாயம் ஆடியே வரதட்சணை பாக்கியைக் கழிச்சுட் டாளாம்!''

– வே. செந்தில் குமார்



''மாமா! நீங்க தமிழாசிரியரா இருக்க

பிரசுரமாகியுள்ள ஒவ்வொரு ஜோக்குப

லாம். அதுக்காக நாங்க ஹனிமூன் போயிட்டு வந்த உடனே அதைப் பத்தி கட்டுரை எழுதித் தரச் சொல்றது நல்லா இல்லே!''

— வே. செந்தில்குமார்



''ஹனிமூனுக்குப் போன பொண்ணு மாப்பிள்ளை ஏன் பாதியிலேயே திரும்பிட்டாங்க?''

''பஸ்ஸுலே, 'ஜன்னல் சீட்'லே யார் உட்கார்றதுன்னு, அவங்களுக்குள்ளே சண்டை வந்திருக்காம்!''

— ஆர். அப்துல் சலாம்



''இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கே ரொம்ப பிடிவாதமுங்க. ஹனிமூனுக்கு ஊட்டிதான் போகணும்னு அவள் ஒத்தைக் காலில் நிக்கறா. இவனோ கோடைக் கானல் தான் போகணும்னு குதியோ குதிக்கிறான்.''

''அப்ப என்னதான் முடிவு பண்ணாங்க?''

''அவ ஊட்டிக்கும் இவன் கோடைக் கானலுக்கும் டிக்கெட் எடுத்திட்டாங்க!''

- என். பாஸ்கரன்



''குளுகுளுன்னு காற்றும் கண்ணுக்கு எட்டியவரை தண்ணியும் உள்ள ஊருக்கு ரிட்டர்ன் டிக்கெட் எடுத்துக் கொடுத்து ஹனிமூனுக்கு அனுப்பி வெச்சுட்டார் என் மாமனார்.''

''நீ ரொம்ப கொடுத்து வச்சவண்டா!''

''வயிற்றெரிச்சல்! சென்னை பீச் ஸ்டேஷனுக்குன்னு சொல்றேன்.''

- சாமா

''உங்க ஹனிமூனிலேயே மறக்க முடியாத சந்தோஷ சம்பவம் எது?''

''நாங்கள் ஆளுக்கொரு படகை எடுத்துக் கொண்டு கொடைக்கானல் ஏரியில் சுற்றி வந்ததுதான்!''

— என். எம். லக்ஷ்மி



ரூ. 100 பரிசு பெறுகிறது.

# "பதறினர் பெற்றோர்; பறந்தோம் ஆட்டோவில்...!"



டாக்டர் தமிழரசு - குழந்தை நல மருத்துவர்

"ஓரிரு வருடங்களுக்கு முன் ஒரு நாள் காலை தன் மூன்று வயது ஆண் குழந்தையை ஆட்டோவில் தூக்கிக் கொண்டு அரக்கப் பரக்க என் க்ளினிக்கிற்கு வந்து சேர்ந்தார்கள் அந்தத் தம்பதியர்.

இருவருமே சமீபத்தில்தான் அருகில் உள்ள ஒரு பகுதிக்கு குடிவந்திருந்தனர். இதற்கு முன் என்னிடம் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த யாரும் சிகிச்சைக்கும் வந்ததில்லை. கண்ணில் பட்ட முதல் க்ளினிக் என்பதால் உள்ளே நுழைந்திருக்கிறார்கள்.

அந்தக் குழந்தை மிகவும் சீரியஸான கட்டத்தில் இருந்தது. உதடுகள் நீல நிறமாகக் காட்சியளித்தன. உடல் அசைவே இல்லை. மூச்சு அவ்வப்போது வந்து கொண்டிருந்தது, அவ்வளவுதான். இதயத்துடிப்பு மிகவும் பலவீனமாக ஒலித்தது.

அது விஷமக்காரக் குழந்தையாம். அன்று காலை அவன் அம்மா குளிக்கப் போயிருக்கிறாள். குதிரைப் பயிற்சியாளரான அந்தக் குழந்தையின் தந்தை வெளியில் போயிருந்த சமயம் அது. வீட்டின் அலமாரியில் கீழ்தட்டில் இருந்த பாட்டிலைத் திறந்து அதில் இருந்த தூக்க மாத்திரைகளை ஒவ்வொன்றாக கடித்துத் தின்றிருக்கிறான் அவன். இப்படி அவன் விழுங்கியது எட்டு தூக்க மாத்திரைகள்!

குளித்து முடித்துவிட்டு வெளியே வந்த தாய், மகனின் நடையில் ஒருவித தடுமாற்றத்தைக் கண்டிருக்கிறார். முதலில் அவ்வளவு கவனம் செலுத்தவில்லை என்றாலும் மகன் கீழே விழுவதையும், அவன் உதடுகள் நிறம் மாறியதையும் கண்டவுடன் பதறிப் போய் ஆராய்ந்திருக்கிறார்கள். தூக்க மாத்திரை பாட்டில் கீழே கிடப்பதைக் கண்டதும், அலறியடித்துக் கொண்டு என்னிடம் அழைத்து வந்திருந்தனர்.

இந்த விவரங்களை எல்லாம் நான் பிறகு தான் அறிந்து கொண்டேன். உயிர் போகும் நிலையிலிருந்த அந்தக் குழந்தைக்கு உடனடி சிகிச்சை மிகத் தேவையாக இருந்தது. சலைன் வாட்டர் கொடுத்து, வயிற்றை சுத்தம் செய்வதற்கெல்லாம் கூட சமயமில்லை. உயிரைக் காப்பதுதான் முக்கியமாக இருந்தது.

உடலின் இயக்கத்தைத் தூண்டி விடுவதற்காக 'அட்ரினலின்' ஊசி மருந்தைச் செலுத்தினேன். கூடவே இதயப் பகுதியை மாறி மாறி மஸாஜ் செய்தேன். லேசாக சீரான மூச்சு வரத் தொடங்கியது. பெற்றோரிடம் "உடனடியாக குழந்தையை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்வது அவசியம், அங்கேதான் உயிர்காக்கும் கருவிகள் எல்லாம் உண்டு" என்ற நான் குழந்தை மருத்துவத்தில் பெயர் போன சைல்டு டிரஸ்ட் ஹாஸ்பிடலை சிபாரிசு செய்தேன். என்னையும் தங்களுடன் வரச் சொல்லி மிகவும் கேட்டுக் கொண்டார் அந்தத் தாய். அவர்கள் வந்த ஆட்டோவிலேயே ஏறிக் கொண்டோம்.

ஆட்டோ கிளம்பிய ஓரிரு நிமிடங்களிலேயே குழந்தையின் உடல் ஏதோ வலிப்பு வந்தது போல் வெட்டி இழுக்கத் தொடங்கியது. இன்னும் அரை மணி நேரப் பயணத்தில் விபரீதமான விளைவு ஏற்படக்கூடும் என்று கருதிய நான், அருகில் இருந்த மலர் மருத்துவமனைக்குச் செல்லுமாறு ஆட்டோ டிரைவரிடம் கூறினேன்.

மருத்துவமனையை அடைந்தவுடனேயே



குழந்தையின் உடல நிலையைப் பற்றிய விவரங்களை நான் எடுத்துச் சொன்னேன். நா... பின் மூலம் திரவம் செலுத்துதல், மூச்சு வாங்குவதற்கு உதவும் கருவியை குழந்தையின் உடலில் பொருத்துதல், பொருத்தமான மருந்துகள் இவற்றை அங்குள்ள மருத்துவர் குழு செயல்படுத்த, குழந்தை ஆபத்தான கட்டத்தை தாண்டிவிட்டது... என்று நினைத்தோம். ஆனால் மருத்துவமனையில் அனுமதித்த முக்கால் மணி நேரத்தில் தொடர்ந்து அந்தக் குழந்தையின் உடல் வெட்டி இழுக்கத் தொடங்கியது. கேஷுவாலிட்டியிலிருந்து தீவிர சிகிச்சைப் பிரிவுக்கு மாற்றப்பட்டது அந்தக் குழந்தை. மருத்துவர்களின் திறமையான, ஒருங்கிணைந்த சிகிச்சையில் அன்று மாலை மூன்று மணிக்கே குழந்தையின் உடல் சீரடைந்தது. மறுநாள் போய்ப் பார்த்தபோது விஷமம் செய்யத் தொடங்கியிருந்தான் அந்தச் சிறுவன்.

நான் உட்பட சம்பந்தப்பட்ட அத்தனை ...டாக்டர்களும் அந்தச் சிறுவனின் மூளையில் பாதிப்பு ஏதாவது உண்டாகியிருக்க வேண்டும் என்று கருதியிருக்க, சோதனை செய்து பார்த்ததில் அந்தச் சிறுவனின் மூளையில் எந்த பாதிப்புமே இல்லை என்பது தெரிந்தது. இதை மருத்துவ அற்புதம் என்றும் இறைவனின் சித்தமென்றும் நாங்கள் கருதினோம்.

குழந்தைகள் இருக்கும் வீட்டில் மருந்து மாத்திரைகளை அவர்களுக்கு எட்டும் விதத்தில் வைப்பதனால் உண்டாகும் விபரீதங்களை அடிக்கடி பார்க்க நேருகிறது. பெற்றோரே கவனம் தேவை!"

சந்திப்பு : **அருண்சரண்யா**

புகைப்படம் : **ஸ்ரீஹரி**

